உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 6 } இரௌத்திரி ஸ்ரீ ஆடிமீ கஉ { பகுதி 1
1920 ஸ்ரீ ஜுலைமீ 16உ

## கடவுள் வணக்கம்.

இருவிழிக ளுலகறிந்துந் தனையறியா ததுபோ
லியானறியும் பொருளலதிங் கெனையறியா மையினாற்
கருவிடைபுக் கின்பதுன்பக் கடலிடையே சுழன்று
கண்கலக்கப் படுவேனைக் கருணைவிழி யதனா
லருவினைக ளறநோக்கி யாணவமே போக்கி
யகமகமென் றிருந்தவெலா மறிவுகொடே நீக்கிப்
பருவமதிற் பதந்தாக்கிக் கற்பனைக ளியாவும்
பாழாக்கித் தானாக்கும் பரகுருவைப் பணிவாம்.

மூலமா யெவைக்கு மறிவொன்றா யுருவாய்
மும்மலங் களைந்தவர்க் கெளிதா
யாலபோ சனஞ்செய் தழிவிலா தவனை
யருமறைச் சிரத்தொளிர் பவனைப்
பாலலோ சனனைப் பசுதொறும் பதியாய்ப்
பக்குவச் சனகனா தியர்க்கா
யாலமா நீழ லமர்ந்துறை பவனை
யகத்தவி சிருத்தியின் படைவாம்.

பொறியிற் செறியைம் புலக்களியைப் புந்திக் கவராற் புகுந்திழுத்து
மருகிச் சுழலு மனக்குரங்கு மாள வாளா விருப்பேனோ
அறிவுக் கறிவாய்ப் பூரணமா யகண்டா னந்த மயமாகிப்
பிறிவற் றிருக்கும் பெருங்கருணைப் பெம்மா னேயெம் பெருமானே.

உரையுணர் விறந்து தம்மை யுணர்பவ ருணர்வி னூடே
கரையிலா வின்ப வெள்ளங் காட்டிடு முகிலே மாறாப்
பரையெனுங் கிரணஞ் சூழ்ந்த பானுவே நின்னைப் பற்றித்
திரையிலா நீர்போற் சித்தந் தெளிவனோ சிறிய னேனே.

# ஆனந்தபோதினி

இரௌத்திரி ௵ ஆடி ௴ ௧௨

## நமது விண்ணப்பம்.

ஸ்ரீமத் அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூபியும், கருணா நிதியும், தோற்ற ஒடுக்கமற்ற சுயம்புமாகிய பரம்பொருளின் திருவருளால் நமது ஆனந்தபோதினியின் ஐந்தாவதாண்டு திருப்திகரமாகவே நிறைவுற்று இம்மதி ஆறுமாண்டு தொடங்கியிருக்கிறது. காகித பஞ்சத்தாலும் வேறுபல எதிர்பாராத காரணங்களாலும் பத்திரிகைகளுக் கெல்லாம் பல இடையூறுகள் நேர்ந்தன வென்பது யாவருமறி கண்கூடாகக் கண்ட ஓர் உண்மையேயாகும். அந்தகைய இடையூறுகளில் ஒன்றிலேனும் சிக்காது தவறாது நமதானந்தனைக் காலக்கிரமப்படி மாதந்தோறும் கடந்த ஐந்தாண்டுகளாக வெளிவரச் செய்து நம்பல்லாயிர சந்தாநேயர்கட்கும் மகிழ்ச்சியையூட்டிவந்த மறைமுதற் செல்வனை மனதாரப் போற்றித் துதிக்கின்றோம்.

நமது சஞ்சிகையின் ஆரம்பகாலம் முதல், நாளது வரையில் அதை யாதரித்து வருவதோடு அதன் அபிவிர்த்திக்காக இடைவிடா முயற்சி யெடுத்துக்கொள்ளும் நமது அன்பார்ந்த சந்தாநேயர்களுக்கும், விஷய தானம்புரியும் அன்பர்களுக்கும் மனதார்ந்த நன்றியோடு வந்தனமளிப்பதன்றி, கருணையா முருவுடைப் பரம்பொருட் செல்வன் அவர்களுக்கு நீண்ட ஆயுளும் இருமைப்பயன்களும் அருள் புரியவேண்டுமாய்ப் பிரார்த்திக்கின்றோம்.

காகிதம் மசி முதலிய அச்சுக்கருவிகளின் விலை தலை கீழாக விருக்கும்போதும் நாம் சந்தா விகிதத்தை யதிகப்படுத்தாது ஒரு ரூபாயாகிய மிகக்குறைந்த சந்தாவிலேயே சஞ்சிகையை நடத்திவருவது, எவ்வித இலாபத்தையும் எதிர்பார்த்தல்ல வென்பது கூறாமலே விளங்கும். ஆயினும் எவ்விதச் சுயநலனுங் கருதாமலே யொருகாரியத்தைச்செய்தல் மனித சுபாவமன்றாம். ஆதலின் இதில் நமக்கும் ஒருகோரிக்கையுளது. என்னெனின், நம் அருமைவாய்ந்த தெய்வீகத் தாய்மொழி தன் தனிப்பெருமைகுன்றாது மென்மேலும் விர்த்தியடைந்து, அதன் அறிகுறியாக நம் தமிழ்நாட்டின்கண் ஒவ்வொரு

குடும்பத்திலும் குறைந்தது ஒவ்வொரு ஆனந்தபோதினி யேனும் உலவிவரவேண்டு மென்பதே நமதந்தரங்கக் கோரிக்கையாகும். அக்கோரிக்கை யீடேறுவதற்குக் கடவுளுக்கிரண்டாவதாக நமது சந்தா நண்பர்களையே பூரணமாய் நம்பியிருக்கிறோம். நமது சஞ்சிகையின் தன்மையை நன்குணர்ந்த அனுபவிகள் அவர்களே யாதலின், அவர்களே அதனாலடையத் தக்க பயனைக்குறித்துப் பிறர்க்கு எடுத்துரைக்கத் தக்கவர்கள். ஆறுவது வருட ஆரம்பமாகிய இவ்வமயத்தில் நமதா அன்பார்ந்த சந்தாநேயர்கள் ஒவ்வொருவரும் சொல்ப சிரத்தை காட்டுவார்களே யாயின், சஞ்சிகையின் அமைப்பை நம்மாற் கூடியவரையில் விர்த்தி செய்ய நாம் சற்றும் பின்னிடையோம். அடியார் கோரிக்கையை யீடேறச் செய்வதையே யானந்த மாகக் கருதும் அருட்கடலாகிய ஆண்டவன் அருள் புரிவானாக.

---

ஓம்தத்ஸத்.

## பத்திரிகையும் பிரசங்கமும் ஏன் ?

நண்பர்களே ! ஒரு கருவியைக் கொண்டு ஒரு வேலையைச் செய்து முடிப்பதெனின், அக்கருவியை யுபயோகப்படுத்தும் முறையாக உபயோகப் படுத்தினால்தான் காரிய சித்தி யுண்டாகும். தச்சனிடம் பல ஆயுதங்கள் இருக்கின்றன. அவைகளை யெல்லாம் அவன் பார்த்துப் பார்த்து சந்தோஷமடைந்து பெட்டியில் பத்திரமாக வைத்துக்கொண்டால் என்ன பயனடைவான்? அல்லது அவைகளைக் கையாளத் தொடங்கி வாச்சியால் செய்யவேண்டியதை உளியாலும், உளியால் செய்யவேண்டியதை இரம்பத்தாலும், இவ்வாறு ஒரு கருவியை யுபயோகிக்க வேண்டிய சமயத்தில் வேறொரு கருவியை யுபயோகித்து வேலை செய்தால், அவன் தொழில் நிறைவேறுவது யாங்ஙனம்? சமயத்திற்குத் தகுதியான கருவியை யறிந்து உபயோகித்தால்தான் கருதிய காரியம் சித்தியாகும்.

இவ்வாறே பத்திரிகைகளை வாசிப்பதாலும் பிரசங்கங்கள்கேட்பதாலுமே நாட்டிற்குப் பயனுண்டாகி விடாது. மற்ற நாடுகளனைத்தும் இவை யிரண்டாலுமே உன்னத நிலையடைந்து சீரும் சிறப்பும் செல்வமும் பொருந்திப் பொலிகின்றன. நம் புண்ணிய பூமியில் இவை வேண்டிய அளவிற்கு எவ்வளவோ குறைவாக விருப்பதே பெருங்குறை. அது ஒரு பக்கமிருக்க, உள்ள வரையிலாவது இவை பயனளிக்கத்தக்க வழியில் உபயோகமாகின்றனவா வெனக் கவனிப்போம்.

நம் நாட்டாரில் பத்திரிகை வாசிப்போரில் பெரும்பாலார் காலப்போக்குக்காகவும் வேடிக்கை விநோத விஷயங்களை யறிவதற்காகவுமே அதை வாசிப்பதெனறு கருதுகிறார்கள். பத்திரிகைக்கும் பிரசங்கத்திற்கும் மிக்க வித்தியாசமில்லை. பிரசங்கத்தில் ஒரு மனி

தன் ஒரு விஷயத்தைப் பற்றித் தன் முன் கூடியிருக்கும் சபையோர்க்கு மட்டும் போதிக்கிறான். அதை யவன் கூறும்போது மட்டும் கவனத்தோடு கேட்டுக்கொள்ளலாமே யன்றி, மறந்துபோய் மறுபடி கேட்கலாமென்றால் முடியாது.

பத்திரிகையோ, ஒரு மனிதனோ பல மனிதரோ பல விஷயங்களைப் பற்றிப் பல்லாயிரம் பேருக்குப் போதிப்பதாகும். அவற்றை யெவ்வளவு தூரத்தி லிருப்போரும் ஒரு முறைக்குப் பன்முறை வாசித்து நன்றாக அறிந்து கொள்ளலாம். இவ்வாற்றால் பத்திரிகையே மிக்க பயனளிப்ப தென்னலாம்.

ஆனால் நண்பர்களே! மேல் நாட்டார் முதலியவர்கள் பத்திரிகை வாசிப்பதற்கும் நம்மவர் வாசிப்பதற்கும் மிக்க வித்தியாசமிருக்கிறது. நம்மவரில் கொஞ்சமேனும் வாசித்தவர்களே பத்திரிகையை வாசிக்கிறார்கள். ஒரு முறை வாசித்ததே அதை யொரு புறம் எறிந்து விடுகிறார்கள். அதோடு கூடவே அதிலிருந்து தங்கள் மனதில் பதிந்த விஷயங்களையும் எறிந்து விடுகிறார்கள். வாசிக்கும் சமயத்தில் மட்டும் " ஆ! இவர் கூறுவதுதான் சரி. அந்த நாட்டார் மனம் ஒருமித்து ஒற்றுமையாக நடக்கிறார்கள். அதனால்தான் அவர்கள் காரியம் கைகூடிற்று. நம்மவர்கள்தான் காக்கைக் கூட்டங்கள்-நெல்லிக்காய் மூட்டைகள் ஆயிற்றே. கிளைச் சங்கங்கள் ஏற்படுத்தி அங்கங்கே யிருக்கும் கல்வி யில்லாச் சனங்களுக்கெல்லாம் இதைப் படித்துக் காட்டுவதாம். வேலை யென்ன பின்னே ? இப்படி யெழுதுகிறவன் இவனே அங்கங்கே போய்ச் சங்கங்கள் ஏற்படுத்தி யாவர்க்கும் போதிப்பது தானே...." என்று இவ்வாறு பேசுவார்கள்.

அந்தோ! நம்மவர் இந்த நிலைமையில் இருக்கிறவரையில் எவ்வாறு கடைத்தேறுவார்கள்? மேல் நாட்டார்களோ இப்படியில்லை. "பத்திரிகைகள் நமது தாய் நாட்டின் க்ஷேமத்திற்காகவே நடத்தப் படுகின்றன. அவற்றில் கூறப்பட்ட விஷயங்களெல்லாம் நாம் செல்வமும் சிறப்பும் பெற்று முன்னேற்ற மடைவதற்கு அவசியமான மார்க்கங்கள். ஆகையால் அவற்றில் கூறப்படும் மார்க்கங்களை யனுசரித்து நாம் நடக்கவேண்டும். அப்போதுதான் நமது சந்ததியாரேனும் க்ஷேம முறுவார்கள்" என்பதை மேல் நாட்டார்கள் நன்கறிவார்கள்.

பத்திரிகையில் ஒரு புது விஷயம் கூறப்பட்டிருந்து அதன்படி யாவரும் செய்யவேண்டியது அவசியமென்று கண்டால், அவர்கள் அதைப் படித்துவிட்டுப் பேசாமலிருக்கவே மாட்டார்கள். உடனே அதற்காக முயற்சி யெடுத்துக்கொண்டு தங்கள் ஊரில் அதற்காக வென்று ஒரு சங்கத்தைத் தாபித்து அவ்விஷயம் நடைபெறும்படிச் செய்வார்கள். இவ்வாறு சில விடங்களில் நேர்ந்திருப்பது பத்திரிகைகளின் வாயிலாக வெளிவந்ததைப் பார்த்து மற்ற விடங்களிலும்

அவ்வாறே செய்வார்கள். அத் தேசத்தார் சுய நலத்தை விடப் பொது நலத்தையே முக்கியமாகக் கருதியுழைப்பார்கள். இத்தகைய காரியங்களைச் செய்யும்போது நமக்கு எதிர்க்கட்சியார் செய்வதை நாம் செய்யலாகா தென்றிருக்கமாட்டார்கள். அல்லது எதிர்க்கட்சி யார் செய்யும் இக்காரியம் பயன்படாமற் செய்ய வேண்டுமென்று கருதவே மாட்டார்கள்; தாய் நாட்டின் க்ஷேமத்திற்கு ஒரு காரியத்தைச் செய்வதென்றால், அப்போதுமட்டுமாயினும் எல்லாக்கட்சிபேதங்களையும் விரோதங்களையும் மறந்து யாவரும் ஒரு மித்து வேலை செய்வார்கள்.

இவ்விஷயத்தில் நம்மவர்கள் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்பதைச் சற்று சிந்தித்துப் பாருங்கள். அந்தோ! அது மிக்க மனத்துயரை யுண்டாக்குகிறது. நம்மவர்கள் பத்திரிகைகளில் அறிவாளிகள் செய்யவேண்டுமென்று கூறுவதைக் கவனிப்பதேயில்லை. ஒரு விஷயம் கெட்டதென்று நிரூபித்து அதைச் செய்வது நமது நாட்டின் க்ஷேமத்திற்குத் தீங்கு விளைவிக்கும் என்று கூறியிருந்தால் அதை வாசித்து விட்டுப் பலர் முன்னிலையிலும் ஆம் ஆம் என்று கூறிவிட்டு, மறு நாழிகை அதே விஷயத்தைச் செய்கிறார்கள்.

பெரிய நகரங்களில் மட்டும், வாசித்தவர்கள் சிலர் மூன்று சேர்ந்து பத்திரிகைகளை வாங்கி வாசிப்பதால் மட்டுமே நமது நாடு க்ஷேமமடைந்து விடாது.

முதலாவது பத்திரிகைகளில் கோரிக்கொள்ளப்பட்ட விஷயங்களில் நம் தாய் நாட்டிற்கு க்ஷேமம் என்று தோன்றுகிறவைகளைக் கட்டாயம் செய்யவேண்டும். மற்ற பேர்களுக்கும் அவற்றைப்பற்றி விளக்கிக்காட்டி அவர்களையும் செய்யும்படி வேண்டிக் கொள்ள வேண்டும்.

2. கல்வி யில்லாதவர்களுக்குப் பத்திரிகைகளினு லுண்டாகும் நன்மைகளைக்கூறி, பத்திரிகைகளை வாசிக்க அவர்களுக்குப் பிரியமுண்டாகும்படிச் செய்யவேண்டும்.

அத்தொழிலே தாய் நாட்டிற்காக நாம் செய்யும் பொது நலக் கைங்கரிய மாகுமன்றி ஒருவரோ, சிலரோ, பத்திரிகை வாங்கி நம் வரையில் வாசிப்பது ஒருபோதும் சமூகஊழியமாகாது.

3. மேல் நாட்டில் நடப்பது போல் நம் நாட்டிலும் ஒவ்வொரு கிராமத்திலும் இரண்டு மூன்று பத்திரிகைகளேனும் வரவழைத்து வாசிக்க அனுகூலமாக விருக்கும்படி ஒரு வாசகசாலை ஏற்படுத்த வேண்டும். இப்போது ஏற்பாடாகிவரும் கிராமப்பஞ்சாயத்துகளால் சுலபமாக இதைச் செய்யலாம். ஆனால் முதலில் ஆங்காங்குள்ள அறிவாளிகளிற் சிலர் சிரத்தை யெடுத்துக்கொண்டு

தந்தமக்கு அருகிலுள்ள கிராமவாசிகளுக்கு அதன் அவசியத்தை யெடுத்துக்காட்டி அப்படிச் செய்யும்படி அவர்களைத் தூண்டவேண்டும்.

ஒருவனுக்குக் கல்வி கற்பிப்பதெனின் அவனுக்குக் கடைசி வரையில் நாம் கல்வியை யூட்டிக்கொண் டிருக்கவேண்டும் என்பதல்ல. அவனே கல்வியில் தேர்ச்சி பெறும் படியான மார்க்கத்தை யவனுக்குக் காட்டிவிடவேண்டியதே அவசியமானது.

அது போலவே பாமர ஜனங்கள் பத்திரிகைகளின் வாயிலாக அவசியமான விஷயங்களை யுணர்ந்து, அறிவு வளர்ச்சி பெற்று மேலோங்கி வரும் மார்க்கத்தை யவர்களுக்குப் போதித்து, அதில் அடியெடுத்து வைக்கும்படி செய்து விட்டால், பிறகு அம்முயற்சி தானே விர்த்தியடையும. ஒரு செடியை வளர்க்க நாம் பூமியைப் பண்படுத்தி விதையை நட்டு நீர் வார்த்து முளை கிளம்பும்வரை கவனித்தால் பிறகு அச்செடி தானே வளர்ந்து பூத்துக் காய்த்துப் பலனளிக்கும்.

4. **பிரசங்கம்:**—அழகிய கட்டிடத்திற்குள் வாசித்த பண்டிதர்களையும், செல்வ வந்தர்களையும், பிரபுக்களையும் வரவழைத்து அவர்கள் முன் ஒரு விஷயத்தைப் பற்றிப் பிரசங்கம் செய்வதால் மட்டும் தேசத்திற்கு நன்மை யுண்டாய் விடாது. ஏழைகளுக்கும், நாகரீகக் குறைவுள்ளவர்களுக்கும், கல்வி யில்லாதவர்களுக்கும்,சொல்ப கல்வி யுடையோர்க்கும், தாழ்ந்த அந்தஸ்தி லுள்ளோர்களுக்குமே, அவர்கள் சீர்திருத்தமும், கல்வி யறிவும், நாகரீகமும் அடைவதற்கு அவசியமான விஷயங்களைப்பற்றிப்போதனை செய்யவேண்டும். அவர்கள் மேலோங்கி வரும் மார்க்கத்தை யறிந்து கொண்டு அதில் பிரவேசிக்கும்படி செய்யவேண்டும்.

அப்போதுதான் பத்திரிகைகளாலும் பிரசங்கங்களாலும் உண்டாகக் கூடிய பயனை நாம் அடைவோம்.

நண்பர்களே! மேல் நாட்டாரிட மிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டிய விஷயங்களில் மேற்கண்டவை முக்கியமானவைகளாகும். இத்தகைய அனுகூலமான விஷயங்களை விட்டு நமக்குப் பயனற்றவைகளும், கெடுதியை யுண்டாக்கத் தக்கவைகளுமாகிய விஷயங்களில் மேல் நாட்டாரைப் பின் பற்றுவது நன்மையை யொருபோதும் பயவாது. மேல் நாட்டார் தாங்கள் யாரிடம் சகவாசம் செய்கிறார்களோ அவர்கள் எச்சாதியாராயினும் சரி, எம்மதத்தினராயினும் சரி, அவர்கள் சரித்திரங்களையும் மதாசார ஒழுக்கங்களையும் ஆராய்ச்சி செய்து அவற்றில் தங்களுக்கு அனுகூலமானவற்றை மட்டுமே எடுத்துக் கொள்வார்கள். அந்த விஷயத்தில் நாமும் அவர்களைப் பின்பற்ற வேண்டும்.

எல்லாம் வல்ல கருணாநிதியாகிய சச்சிதானந்தப் பரம்பொருள் நமக்கு அருள் புரிய வேண்டுமாய்ப் பிரார்த்திப்போமாக.

ஓம் தத்ஸத்.

---

## செய்ந் நன்றியறிதல்.

" செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது."

இப்பூவுலகில் மனிதராகப் பிறந்த நாமெல்லோரும் ஒருமிக்க ஒத்து வாழ்வது இன்றியமையாத தாகும். அதிலும் ஒருவர்க் கொருவர் செய்யும் உபகாரத்தை மறக்காமல், அவர்கள் செய்த உதவிக்காக அவர்களைப் போற்றி வாழ்தல் இனிதினும் இனிதேயாம். இவ்வாறு வாழ்தலே செய்ந்நன்றியறிந்து வாழ்தல். நன்றி யறிதல் மனிதருக்குள்ள அல்லது இருக்கவேண்டிய முக்கியமான குணங்களி லொன்றாகும். ஒருவர் செய்த நன்றியை மறத்தலைவிட வேறு கொடியது ஒன்று மில்லை.

" மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு."

நமது துக்க காலங்களில் உதவிசெய்தவாது சிநேகத்தை நாம் விருத்தி செய்யவேண்டும். நன்றி யறிதல் ஒருவர் செய்த உதவியை மறவாமல், அதற்கு மனமார வந்தனம் செலுத்தலே என்று கூறுவர் பெரியோர். ஒருவர் நமக்குச் செய்த சிறிய உதவிக்காக அப்பொழுதே வந்தன மளிப்பதற்கும், நன்றியறிதலுக்கும் அதிக வித்தியாச முண்டு. பின்னால் சொல்லப்பட்டது நீடித்து நம் மனத்தில் நிற்க வேண்டுவது.

" நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல [ளர்.
தன்றே மறப்பது நன்று" என்று தெய்வப் புலவரும் கூறியு

ஒருவன் செய்த தீமையை அன்றே மறந்துவிட வேண்டும். ஆனால் நன்மையை அவ்வாறு மறந்துவிடல் நல்லதல்ல. நாம் தெருவில் செல்லும் போது திகைக்கையில் எவனொருவன் நமக்கு வழிகாட்டுகிறானோ அவனுக்கு வந்தன மளித்துச் செல்லாவிடின் நம்மை மூடர் என்று சிலர் நினைப்பார்கள்.

" எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு."

ஒருவர் கொடுத்த பெரிய வரங்களைக் கெடுத்தாலும் அப்பாபத்தினின்று நீங்கும் வழியுண்டு. ஒருவன் செய்த நன்றியை மறந்தால் அப்பாபத்தினின்று உய்யும் வழியே கிடையாது.

நாம் குடிகளா யிருப்பதால் நம்முடைய முன்னேற்றத்துக்கு ஓய்வொழிவின்றி உழைத்த மஹான்களுக்கு நாம் எவ்வளவு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம்! நமக்காகப் பாடசாலைகளும், வைத்திய சாலைகளும் வைத்திருக்கும் பெரியோர்களுக்கு நன்றி செலுத்துவோமாக. நன்றி செலுத்துதல் பார்வையினாலும், வார்த்தையினாலும், செய்கையினாலும் செ

லுத்தக்கூடியது. செய்கையினால் நன்றிசெலுத்தமுடியாவிட்டால் வாக்கினாலாவது செய்யவேண்டும். சமாதிகளின் மேல் எழுதப் பெற்றிருக்கும் வார்த்தைகள் அதில் சமாதி செய்யப் பட்டவர்களுக்கு நன்றியைக் காட்டுகின்றன. ஒரு வயது முதிர்ந்தவன் ஒரு புளியம் விதையை நட்டு அதற்கு வேண்டுவனவெல்லாம் செய்யும்போது ஒரு சிறுவன் "ஐயா! உமது காலத்தில் பலன்தராத அவ்விதையை என் நடுகிறீர்கள்" என வினவியதற்கு வயது முதிர்ந்தவன் "நான் பிறர் நட்ட மரங்களின் பலனை அனுபவித்ததனால் என் பின்னால் வருபவர்க்கும் இது உபயோகமாக இருக்குமென்று நடுகிறேன்" என்றானாம்.

ஷேக்ஸ்பியர் (Shakespeare) என்னும் ஆங்கில வித்துவான் கூறுகிறார்:—

'"..............." குளிர்காலத்தில் வீசும் காற்றானது' நன்றியறியாதிருத்தலைக்காட்டிலும் கொஞ்சம் குறைவாகவே துன்புறுத்துகிறது. ஏனெனில் அது கண்ணுக்குப் புலப்படுவதில்லை. நன்றியறியாத ஒருவன் உபகாரம் செய்தவன் முன்னால் நிற்பனேல் அவனுக்கு அவமானமும் உண்டாகிறது"........................."

ஒருவர்க்கு நாம் உபகாரம் செய்தால், அவர்கள் மறுபடி எப்பொழுது நமக்கு உதவி செய்வார்கள் என்று காக்கவேண்டா.

"கைம்மாறு காவாமற் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மால் இயன்ற உதவி செய்வரம்மா!..........."

"நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால்."

"நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போல் காணுமே—அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க் கீந்த உபகாரம்
நீர்மேல் எழுத்திற்கு நேர்."

நாம் இவ்வுலகில் முக்கியமாக அறுவர்க்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். முதலாவது;—தாயானவள் நம்மைப் பத்துமாதம் சுமந்து, வருந்திப் பெற்று, எண்ணெய் புகட்டிப் பாலூட்டி, நீராட்டி, மைதீட்டிப், பாராட்டின ளல்லவா? வியாதி வந்த காலத்து அருமையாய்ப் பாதுகாத்து மற்றச் சமயங்களிலும் உதவி செய்கின்றனள் அல்லவா? இரண்டாவது;-தந்தையானவனர், நமக்கு உணவும் உடையும் ஈந்து, கல்வி கற்பித்து, நல்லோர் நேசத்தையாக்கி நம்மை யுயர்ந்த பதவிக்குக் கொண்டுவருகின்றனரன்றோ!

மூன்றாவது:—குருவானவர் மாணாக்கருக்கு நல்லறி வுண்டாகுமாறு கல்வி புகட்டி, அன்பும் ஆதரவுங்கொண்டு அருமையான பல பொருள்களையும் உபதேசிக்கின்றனரன்றோ! குருவில்லாத கல்வி பெருகாதன்றோ!

நான்காவது:—கடவுளானவர் நமக்குக் கை கால் முதலிய அவயவங்களைக்கொடுத்து, நன்மைதீமைகளை இன்னவென நூல்களாற் காட்டி, மற்

றும் மழை வெயில் முதலிய அவசியங்களையும் கருணை யுடன் ஈந்து, நமக்குண்டாகும் நோய்களைப் போக்கி நம்மைக் குறைவறப் பாதுகாக்கின்றனரன்றோ! அப்படிப்பட்ட கடவுளது ஆணையாகிய அறநெறிகளை நாம் கடைப்பிடித்து ஒழுகுதலே கடமையாகும். அவர் நமக்குச் செய்யும் உதவிகளை ஒவ்வொன்று யுரைக்கப் புகின் அவை அளவின்றி வளரும்.

ஐந்தாவது: அரசனானவன், குடிகளுக்கு ஐவகைத்துன்பங்களை நீக்கி நன்மைகளையாக்கி ஆண்டு வருகிறானன்றோ!

ஆறாவது:பெரியோர், நல்லொழுக்கங்களை நாட்டி, நம்முன்னேற்றத்திற்காக உள்ளும் புறமும் ஒத்து உதவி புரிகின்றனரன்றோ! ஆதலின் இங்குக்கூறிய இவர்களிடம் நாம் எக்காலத்தும் நன்றி மறவாமல் நடப்போமானால், நாடெங்கும் வாழ நலனுறலாம்.

ஆன்றோர் கூறியபடி செய்ந்நன்றி யறிந்து, கடவுளைநம்பி நீடூழி வாழ்ந்து ஜகதீசனது திருவடிகளை யடைவோமாக!

C. P. சுந்தா ராம்,
ஸ்ரீ கிருஷ்ணர்வாசக சாலை, கோயமுத்தூர்.

---

## கைவல்ய நவநீத வசனம்

(461-வது பக்கத்தொடர்ச்சி)

ஆசிரியர்:—குழந்தாய்! என்ன தடைகளிருக்கின்றன வெனில் அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் என்று மூன்று தடைகளிருக்கின்றன. ஞானம் கைக்கு வந்தும் இவை ஏன் உண்டாகவேண்டுமெனில், எண்ணிக்கையில்லாத பல ஜன்மங்களாக இருந்து வந்த பழக்கத்தாலே இம்மூன்று பிரதிபந்தங்களும் அடிக்கடி வரும். அப்படி வந்தால் பிரம்மான்ம ஐக்கிய ஞானத்தால் அடையவேண்டிய பலன் கை கூடாமற் போம். இனி யிவற்றை யொழிக்க வேண்டிய மார்க்கம் எதுவெனின், வைராக்கியத்தோடு நின்று கேட்டல், சிந்தித்தல், தெளிதல், அதாவதுசிரவணம், மனனம்,நிதித்தியாசனம் என்பவற்றால் அவற்றை யொழிக்கவேண்டும்.

அக்கினி எதையும் தகிக்கும் சுபாவமுடைய தெனினும் மணி மந்திர ஔஷதங்களால் அடக்கப்படுமாயின் எதையும் எரிக்கச் சக்தியற்றதாகும். அதுபோல், அஞ்ஞான சந்தேக விபரீதங்களால் தடை செய்யப்பட்ட ஞானக்கியானது அனாதி காலந்தொடுத்து உளதாகிய பந்தத்தை யழிக்காது. ஆதலின் வைராக்கியத்தோடு சிரவணமனன நிதித்தியாசனங்களால் அத்தடைகளை யொழித்தல் வேண்டும்.

இவற்றில் சிரவணத்தால் அஞ்ஞானமும், மனனத்தால் சந்தேகமும், நிதித்தியாசனத்தால் விபரீதமும் நீங்கும்.

### பிரதிபந்தங்களின் சொரூபம்.

இம்மூன்று பிரதிபந்தங்களில்,

1 அஞ்ஞானம் என்பது "சாட்சியாகிய கூடஸ்தனே நாம். ஈாம் பிரம்ம சொரூபத்தின் அமிசம். ஆகையால் நாம் பிரம்மமே" என்பதைவிட்டு நாம் பிரமமல்ல என்று கருதச்செய்வது.

2

2. சந்தேகம் என்பது ஆசாரியர் "தத்துவமசி" மகாவாக்கிய உபதேசத்தால் 'நீ பிம்மமாக இருக்கின்றாய்' என்று அருளியிருந்தும் அதில் திடநம்பிக்கை வையாமல் நாம் பிரம்மமோ அல்லவோ, என்று சந்தேகங்கொண்டு மயங்குதல்.

3. விபரீதம் என்பது "ஜகம்பொய், பிரம்மம் ஒன்றுமே சத்தியம், நாம் அப் பிரம்மமே" என்று திடன்கொள்வதைவிட்டு "ஜகம்மெய், நாம் பிறப் பிறப்புடைய சீவன்" என்று உள்ளத்தில்மயக்கங் கொள்ளுதல்.

## சிரவணாதிகளின் தன்மை.

1. சிரவணம் என்பது பிரம்மான்ம ஐக்கியத்தைக் கூறும் வேதவாக்கியத்தின் தாற்பரியத்தைக் குருமுகமாக விசாரித்தறிதல்.

2. மனனம் என்பது சிரவணத்தால் விசாரித்து உணர்ந்த பொருளைப் புத்தியால் சிந்தித்தல்.

3. நிதித்தியாசனம் என்பது இவ்விரண்டினாலும் துணிந்த பிரம்மானுபவத்தில் சித்தம் அசைவற நிலைத்து நிற்கச்செய்தல்.

இச்சிரவணாதி மூன்றையும் வைராக்யத்தோடு விடாது அநுஷ்டித்து வருவாயாயின் பிரதி பந்த ரகிதமான நித்திய முத்திப்பேற்றை யடைவாய்.

[" பிரமமல நானென்கை யஞ்ஞான நானப்
பிரமமோ வலனோ வென்றிடலையஞ் சுருதி
வருமினிய யுத்திகளா னென்பரமா யினுமுன்
வளர்ஜீவ பாவமுண்டென் குதல்விபரீ தந்தான்
றருமுறையி லஞ்ஞான திகட்குமுரா ணகுஞ்
சவணமொடு மன்னநிதித் தியாசனங்க ளன்றே."
(வேதாந்த சூடாமணி)

ஒருவன் சாத்திர விசாரணை செய்து பரோக்ஷஞானம் பெற்றுப் பிறகு குரு வுபதேசத்தால் ஐக்கிய நிலையுணர்ந்து அப்பியாசித்துத் தன்னையறிந்த பிறகே ஞானம் பெறுகிறான். அப்படிப் பெற்ற பின்னும் இத்தடைகள் என் வரும் எனின் :—

எண்ணிறந்த காலங்களாக இந்த ஆன்மா "நாம் சீவன், நாம் பாவபுண்ணியங்களாகிய கர்மங்களைச் செய்கிறோம், அதற்குத் தக்க பலனை யனுபவிக்க எழுவகைத் தோற்றங்களாகிய சிருஷ்டியில் மாறி மாறிப் பிறந்திறந் துழன்றுகொண் டிருக்கிறோம்" என்று எண்ணி யிருக்கிறது. நாம் கடவுளின் அம்சம் என்பதையே யடியோடு மறந்து கடவுளைத் தனக்கு அன்னியமாக வேறொரு இரண்டாவது பொருளாக எண்ணி யிருக்கிறது. இப்பிரிவினை மயக்கத்தில் இது எவ்வளவு தூரம் ஆழ்ந்துவிட் டிருக்கிறதெனில், "நம்மை விடக் கடவுள் என்று வேறொன்று கூட இருக்கிறதா?" என்று ஐயப்படக் கூடியதும்! "சே கடவுள் என்பது ஒன்று இல்லவே யில்லை" என்று தீர்மானித்துக் கொள்ளக்கூடியதுமான இவ்வளவுதூரம் ஆழ்ந்துவிட் டிருக்கிறது.

ஆகையால் இப்போது ஏககாலத்தில் "நாம் சீவனல்ல, சிவசாக்ஷி. நாம் பிரம்மசொரூபம். பிரமத்தை யன்றி வேறாக நான் என்ற ஒரு நிலை யிருப்பதாகத் தோற்றுவதும் பொய். நான் என்பதில்லை. எங்கும் நிறைந்த பிரம்ம சொரூபம் ஒன்றே சத்தியமாக என்று முள்ளது. நாம் அதுவாகி

அந்த நிலையில் இருப்பதே முத்தி" என்று சுலபத்தில் நம்பிவிடாது. ஏனெனில் இடையிடையே அப்பழைய வாசனை வரும். அதுவே மேல்கண்ட 'அஞ்ஞான சந்தேக விபரீதங்கள்' என்பன.

அப்பழைய வாசனையே மறுபடி பலப்பட்டு நிலைத்து விடாம லிருப்பதற்காக ஜாக்கிரதை யெடுத்துக் கொள்ளவேண்டும். அந்த ஜாக்கிரதையே 'சிரவண மனன நிதித்தியாசனங்கள்' என்பவை. இவற்றில் சிரத்தையை நாட்டி யிருக்க யிருக்க அப்பழைய வாசனை யடியோடுபோம். இதுகாறும் நாம் பிரம்ம மென்பதை மறந்து சீவனென்று எண்ணி யிருந்தது போல், இப்போது நாம் சீவனென்ற நினைப்பே யடியோடு மறந்துபோய் "நாம் பிரம்மம்" என்ற நினைப்பே நிலைத்துவிடும்.

அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் என்பவைகளுக்கு முறையே சிரவணம், மனனம், நிதித்தியாசனம் என்பவை விரோதிகளாகும்.

ஜன்மாந்தர வாசனையால் தேகம் தோன்றிக்கொண் டிருப்பதால், தான் பிரம்மம் அதாவது சித்து என்பதை மறக்க நேரிடுகிறது. இதுவே அஞ்ஞானம். சாத்திர விசாரணை செய்வதாலும் ஒருவர் கூறக்கேட்டதாலும் தான் சீவனல்ல சித்தேயென்று உணர்கிறோம். இதுவே சிரவணம்.

சிரவணம் செய்துகொண்டிருக்கும் போதும் தேகாதி சடங்கள் அடிக்கடி தோன்றுவதால், நாம் சித்தோ அல்லவோ என்ற கலவர முண்டாகிறது. இதுவே ஐயம். ஒரு முறை கண்டறிந்த அச்சித்தே நாம் ('சிவோகம்' அல்லது 'அகம்பிரம்மாஸ்மி') என்று அடிக்கடி சிந்திப்பதால் அந்த ஐயம் நீங்கும். இதுவே மனனம்.

மனனம் செய்தபடி சித்தே தானாயினும், பிரபஞ்சாதிகள் தோன்றிக் கொண்டிருக்கக் காண்டலால்"நாம் ஏகமாகிய பிரம்ம மாயின் இவையாவும் ஏன்தோன்றுகின்றன" என்ற கலக்க முண்டாவதே விபரீதம். "நாம் சித்தாகிய பிரம்மமே, இங்கு நானாவிதங்களாகத் தோன்றும் யாவும் நாமே;நம்மையன்றி யவையில்லை" என்று யாவும் தானாக விளங்குவதை யனுபவமாகக் கண்டு தெளிதலே நிதித்தியாசனமாம். சாத்திர ஆராய்ச்சியாலும் விசாரணையாலும் உதித்த ஞானம் தீபம்போன்றது. தீபம் பிரகாசம் பொருந்தியதாயினும் காற்றினால் அலைப்புண்டால் அது பொருள்களைச் சரியாக விளங்கச்செய்யாது. அதுபோல "நான் பிரம்மமோ அல்லவோ, முடிவான அனுபவம் ஏகமோ துவைதமோ" என்பது முதலான சந்தேகக்காற்று வீசினால் ஞானமாகிய தீபம் தானளிக்கவேண்டிய பயனைச் சரியாக அளிக்காது. ஆகையால் மேற்கண்டபடி மனனம் செய்வதாகிய திரையால் அத்தீபம் அலையாதபடி காக்கப்படவேண்டும். தீபம் பூரணசோதி வீசிப்பிரகாசிக்கச் செய்யத் தூண்டுகோல் வேண்டு மல்லவா; அது போன்றதே இரண்டற்ற அகண்டாகார அனுபவத்தில் நிலைத்து நிற்பதாகிய நிதித்தியாசனமாகும்.]

சாத்திர விசாரணை செய்து குரு உபதேசம் பெற்று ஞானமடைந்த பின்னும் சிரவண மனனாதிகளைச் செய்துகொண் டிருக்கவேண்டு மென்றால் "எப்போதுமே இச்சந்தேகங்கள் வந்துகொண் டிருக்குமோ? நாம் எப்போதுமே சிரவணாதிகளைச் செய்து கொண்டிருக்க வேண்டுமோ?" என்று ஒரு சந்தேகம் உதிப்பது சுபாவம். ஆகையால், சீடன் "சுவாமி! இங்

வாறு சிரவண மனனாதிகளை யெப்போதும் செய்துகொண்டே யிருந்தால் முடிவான நிலையை யெப்போதுதா னடைவதோ? தயைபுரிந்து இக்கலக்கத்தை நீக்கி யருளல் வேண்டும்" என்றான்.

ஆசாரியர்:—அன்புள்ள மகனே! அத்தகைய கலக்கம் உனக்கு வேண்டாம். எப்போதுமே சிரவணாதிகளைச் செய்துக்கொண் டிருக்கவேண்டிய அவசியமின்று. எதுவரையில் அந்தக் கரணமும், அதன் விருத்தி ரூபமான ஞானமும் உன்னிடம் இருக்குமோ, அது வரையிற்றான் சிரவணாதிகள் வேண்டும். அதற்கப்பால் ஒரு தொழிலும் வேண்டுவதில்லை. எப்போதும் களங்கமற்ற ஆகாயம்போல் ஞேய வஸ்துவாகிய பிரம்ம சொரூப மாத்திரமாகிய நிலையை யடைந்த ஜீவன் முத்தர்கள், பிறகு (பிராரப்த போகம் புசிந்தொழிந்தபின்) விதேகமுத்தி(தேகமில்லா மோக்ஷம்)பெற்று என்று மழிவின்றி அப்பிரம்ம சொரூபமாகவே யிருப்பார்கள்.

ஞாதுரு, ஞான, ஞேயம் எனினும், காண்பான், காக்ஷி, காக்ஷிப்பொருள் எனினும் ஒன்றே. இவற்றிற்குத் திரிபுடி என்று பெயர். ஆன்மாவே காண்பான், பிரம்மமே காக்ஷிப்பொருள், (நாம் பிரம்மமா யிருக்கிறோம் என்று) இவை யிரண்டிற்குமுள்ள சம்பந்தமே காக்ஷி. இக் காட்சியையே மேல் ஞானம் என்றுகூறியது. இந்த நூலாசிரியரே பின்னுலுள்ள தத்துவ விளக்கப்படலத்தில் ('உன்முகம்போற் கண்ணாடிக் குள்ளொரு முகம் கண்டாற்போல்' என்று தொடங்கும் கவியில்) ஞானம் இன்னதென்று விரித்துக் கூறுகிறார். ஆண்டு அறிக.

மேற்கண்ட விவகாரத்தில் நான் என்ற நினைப்பே ஞாதுருவும், நான் பிரம்மமாக விருக்கிறேன் என்ற நினைப்பே ஞானமுமாகும். நான் என்ற தற்போதமும், நான் பிரமமாக விருக்கிறேன் என்ற வாசனையும் அடியோடொழிந்து, நினைப்புமறைப்பற்று ஏகப்பிரம்மசொரூபமாக நின்றுவிடுவதே ஞேய மாத்திரமாய் நிற்பதாகும். இதுவே முடிவான நிலையாகும். இதுவே சிந்தனையற்று, நினைந்ததுமற்று, நினையாமையு மற்று, நானென்பதற்று, யாவுமற்றுத்தன்னந்தனியேநிற்குமிடம். இதுவேபிறப்பற்றவிடம். சிரவண மனனாதிகள் தொழிலேயாகும். இதனாற்றான் தாயுமானவர்,

"கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால்
வாட்டமறு வுற்பவநோய் மாறுபோ—நாட்டமுற்று
மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான்
பொய்யாம் பிறப்பிறப்புப் போம்" என்றருளினர்.

நான் என்ற தற்போதமும், நாம் சிவமாயிருக்கிறோம் என்ற வாசனையும் நீங்கினதே முடிந்த விடமாகும்.

"தன்னை யிழந்திடத்தே தானே சுகவடிவா
யின்னபடி யென்றுணரா வெங்கோனுட்—பின்னமற
நின்ற நிலை தானுந் தெரியாதே நின்றவர்கட்
கன்றோ பிறப்பறுக்க லாம். (சிவபோகசாரம்.)

"உன்னிழப்பில் (நீ யற்றவிடத்தில்) ஆனந்த முதிக்கும்" என்றார் மற்றொரு மகான்.

" எல்லாம் சிவமேயென் றெண்ணினு நின்போத
மல்லாலஃ துண்மையன் றுந்தீபற
ஆங்கது நீங்கிடென் றுந்தீ பற
(அவரோத உந்தியார்.)

மேற்கண்டவாறு, நான் என்ற ஆன்மாவை யறிந்து, பிறகு அதுவே பிரம்மமென உணர்ந்து, அப்பிரம்ம மாத்திரமாய் (ஞேயமாத்திரமாய்) நின்று விடுவதே முடிந்த நிலையாகும். நாம் அப் பிரமத்தின் அம்சமே யென்று ஐயமறத் தெளிவதற்கே "அகம்பிரம்மாஸ்மி" முதலிய வாக்கியங்கள் அருளப்பட்டன. அப்படிக்கின்றி வாசா ஞானமாக "நான் பிரமம்" "நானே கடவுள்" என்பது அகங்காரமேயாகும்.

" நானெனும் பொருள்கா ணுதோர் ஞான்வா காயங் காணுர்
நானெனும் பொருளைக் கண்டோர் ஞானவா காய மாவர்
நானெனு மகங்கா ரக்கார் ஞானவிண் மதியை மூடி
ஞனெனுப் பரம வாம்ப னன்மலர் விரியா தன்றே"
(வாசிட்டம்)

வேதாந்த ஆராய்ச்சி செய்து இவ்வுண்மையை யறியாதார் வேதாந்தம் "நீயே கடவுள் என்று கூறுகிறது" என்று நிந்தைகூறி இடர்ப்படுவர்.

(தொடரும்.)

சீடன்.

---

## கண் கொடுத்த கந்தன்.

பாண்டிய நாட்டின் தலை நகரமாகிய மதுரையைச் சார்ந்த திண்டுக்கல் தாலூகாவில், கன்னிவாடி ஜமீன்தாருக்குச் சொந்தமான கிராமங்களில் வேலை பார்த்து வருகிற ஏஜெண்டு பலரில் ஒருவருடைய காரியஸ்தர் 'வத்திலக்குண்டு' என்கிற கிராமத்தில் ஓர் மிராசுதார். இவரது பெரியோர் பரம்பரையாகப் பழனியாண்டவனை 'வழிபடும் கடவுளாக' த் தொழுது கொண்டு வந்தனர். நமது காரியஸ்தர் குலதருமத்தை மறந்தவராய் இளமைப் பருவத்தில் சரீர சல்லாபத்தில் ஆழ்ந்து வேலையின் பெருமையில் செருக்குற்று இருந்த நாட்களில், அவ்வூருக்கு உத்தியோகஸ்தர் ஒருவர் வந்துசேர்ந்தார். உண்ணும்போதும், உறங்கும்போதும், நடமாடும்போதும் பேசும்போதும், உத்தியோகவேலையை நடத்தும்போதும், தன்னைப்பற்றி ஏதேனும் சொல்ல நேரிடும்போதும், இவர் தண்டாயுதபாணியைப்பற்றிப் பேசாது இரார். இவருக்குக் காலைவேளையில் பூஜை செய்ய ஒழியாது. ஆகவே, இராப்பொழுது தனதாக நினைத்துச் சுமார் எட்டுமணிக்கு ஆரம்பித்து, பத்து அல்லது பதினொரு மணிவரை ஸ்தோத்திரம் செய்து பூஜை முடிப்பது அவர் வழக்கமாயிருந்தது. இந்தப் பூஜைக்கு வத்திலக்குண்டில் உள்ளவர் அநேகர் வருவதுண்டு. வர, வர, பூஜா காலத்தில் ஆடல் பாடல்களும் சேர்ந்தன. சுக்கிரவாரம், சோமவாரம் முதலிய நாட்களில் அபிஷேகம், அர்ச்சனை பலமாயிற்று. ஆவேச பூர்வமாகக் கடவுள் ஆவிர்ப்பவிக்கிற வழக்கம் ஒன்று எப்படியோ ஏற்பட்டது. குறிசொல்வதும், வியாதிகளுக்கு மருந்து சொல்வது முதலியன ஒவ்வொன்றாய்ப் பலத்தன. ஐயருக்கு ஒரு விதப் பேரும் புகழும் உண்டாயிற்று.

பகற் பொழுதில் உத்தியோகக்காரியம், இராப்பொழுதில் பூஜை காரியம். ஆக எப்பொழுதும் இவர்வீட்டில் வைபவமே வைபவம். இந்நாட்களில் நமது காரியஸ்தரும், அவர் மனைவியார் பொன்னம்மாள் என்பவரும் தினேதினே சுவாமி தரிசனத்திற்கு வருகிற வழக்கமாக இருந்தனர். அவர் கொஞ்ச நாழிகை இருந்து மனைவியை யழைத்துக்கொண்டு போய்விடுவர். பொன்னம்மாளுக்குப் பூஜையில் ஒரு பிரேமை. பழனியாண்டவனிடத்து வைத்த அன்பினால் அவள்மனம் இளகலாயிற்று. அநேக இரவுகளில் பூஜா காலத்தில், ஆனந்தபாஷ்பம் சொரிந்தவண்ணமா யிருப்பள். இப்படி ஓர் இரவில் தன்னையறியாது ஆவேசங் கொண்டு, ஆனந்த நடனம் புரியலுற்றனள். குறிசொல்லி விபூதி அளித்தனள்.

இச்செய்தி காரியஸ்தருக்குத் தெரியவரவே தம்மையறியாது கோபம் பிறந்துவிட்டது. அன்று இரவில் மனைவியை மிகவும் கடிந்து வருத்தியிருப்பர் போலும். மறுநாட் காலையிலும் காலை உணவு கொள்ளும் தறுவாயிலும், ஏதோ சாக்குவைத்துக்கொண்டு பொன்னம்மாளைக் கேவலம், பண்ணையாளை யடிப்பவர் போல, கால் தலை தெரியாது புடைத்துவிட்டு வெளியே போந்தனர். பொன்னம்மாள் யாதொரு பாவத்தையும் அறியாதவளாய்த் தன் கஷ்டத்தைப் பழனியாண்டவனிடம் முறையிட்டாள். கருணாநிதிக்கு, மனம் தாளவில்லை. என்ன செய்வார்! விபூதி ருத்திராக்ஷம் தரித்த கிழவர் ஒருவர்போல ஹரே ஸ்ரீகிருஷ்ணாயநம: என்று வரக்கேட்டு, பயபக்தி விசுவாசத்தோடு அக்ஷதையிட்டுத் திரும்பி வந்து பொன்னம்மாள், கூடத்தில் உட்கார்ந்தாள். உட்கார்ந்த விடத்திலிருந்து, அசையவில்லை. பொன்னம்மாளுக்கு இரண்டு கண்களும் தெரியவில்லை. என்னகாரணமோ? எதை நினைத்து அழுவாள்! புருஷனோ மூர்க்கன். போஜனத்திற்கு வரும் நேரம் ஆயிற்று. பொன்னம்மாள் அழுதகண்ணும் சிந்திய மூக்குமாயிருந்து கொண்டு தலைவலி பொறுக்க முடியவில்லையென்றும், "ஐயோ! கண் தெரியவில்லையே! அப்பனே! கண் தெரியவில்லையே" என்றும்மனம் நொந்து வருந்தி அழுதுகொண் டிருந்தனள்.

வந்தார் காரியஸ்தர் மத்தியான போஜனத்திற்கு. கண் தெரியாது போனதற்குக் காரணம் அறியக்கூடவில்லை. 'பொய்,என்று மதித்துப் பின்னும் புடைக்கப்போனார். பொன்னம்மாளைச்'சாமிவந்ததோ உன்பேரில்?' என்றார். பலவிதம் ஏசினார். இதற்குள் அண்டைவீட்டு நண்பர்களும் உறவினர்களும் வந்து கூடினர். எல்லோரும் 'பொன்னம்மாளுக்குக் கண் குருடாய்ப் போய்விட்டது' என்றனர். 'எப்படி இக்கஷ்டம் விளைந்தது' என்று வினவினர் சிலர். காரியஸ்தர் தன் நண்பர்களிடத்திலும், பொன்னம்மாள் தன் தோழிகளிடத்திலும் காலையில் நடந்த விவரத்தைத் தெரிவித்தனர். பிக்ஷைக்குக் கிழவர் ஒருவரும் வரவில்லை யென்றும், வந்தவரின் அங்க அடையாளமுள்ள பெரியவர் ஒருவரும், தெரிந்தவரையில் இல்லையென்றும் தேர்ந்து கடைசியாகத் தெய்வ குற்றமா யிருக்கலாம் என்றனர் சிலர். தெய்வகுற்றமென்றால் யாரை நாடுவார்கள் ஜனங்கள்? இதற்குள்ளாக அம்மையநாயக்கனூரிலிருந்து ஆங்கில வைத்திய பண்டித ரொருவரும், சமீபத்திலுள்ள நாட்டு வைத்தியர்கள் சிலரும் வந்து பொன்னம்மாளுக்குத் தங்களால் சிகிச்சை ஒன்றும் செய்யமுடியாது என்று தெரிவித்தார்கள். காரியஸ்தர் "நேற்றுப் போய்த் தரிசனம் செய்த கடவுளே இப்போது இவளுக்குக்கண்

கொடுக்கட்டும், அந்தக்கடவுள் உண்மையான தெய்வமென்றால்'' என்று பதட்டமாகப் பேசினர்.

சேதுராமய்யரவாள் பூஜைக்கும், இதற்கும் என்ன சம்பந்தம் என்றும், உத்தியோகஸ்தர் மனஸ்தாபம் நமக்கேன் என்றும் பலவிதமாகப் பேசலுற்றனர் சிற்சிலர். என்றாலும் ஐயரவாள் பூஜை இரவில்தான் விசேஷமாய் நடத்துவர். அங்கே பொன்னம்மாளை யெப்படி அழைத்துப்போவது? பல பல சௌகரியா சௌகரியங்களை யெல்லாம் நினைத்து ஒரு விதம் செய்ய ஆலோசித்தனர். காரியஸ்தரைக் கொண்டு ஐயரவாளை வீட்டிற்கு அழைத்து வரச்சொல்லி, என்ன செய்வதென்று கேட்கலாம் என்றனர் சிலர். ஐயரவாளைப் போய்க் கூப்பிடப்போன பொழுது அவர் அப்போதுதான் சமீபத்திலுள்ள கிராமத்திற்குச் சவாரி போய்த் திரும்பி வந்து கொண்டிருந்தார். வரவும் பொன்னம்மாளுக்கு நேர்ந்த விபத்தைக்கேட்ட போது தணலில்விழுந்த புழுப்போல் துடித்தனர். பக்தசிரோன்மணிகளுக்கு இவ்விதம் கஷ்டம் வரக்கூடாதே; வந்தால் கடவுளை பாமர ஜனங்கள் தோத்திரம் செய்யவும், பூஜை செய்யவும், துணியார்களே, என்று தவித்தனர்.உடனே வந்தார். பொன்னம்மாள் ஸ்திதியைப் பார்த்து மனம் தாளாதவராய் ஆண்டவனைப் பலவிதம் போற்றினர்—பாடினர்—கோபித்துக் கொண்டார்—தம்மை இகழ்ந்து கொண்டார்—ஒன்றும் தெரியாது தவித்தார்—கவனம் செய்து வழக்கப்படி தோத்திரம் செய்தார்—நண்பர்கள் சிலர் கூடி குமரகுரு பதிகம் பாடினர்கள். இப்போது மணிபகல் ஒன்று. ஒருவரும் பச்சைத் தீர்த்தம் பல்லில் குத்தவில்லை. எல்லோரும் ஒரேமனதாய்ப் பொன்னம்மாளுக்கு உற்ற கஷ்டத்தை நினைந்து வருந்தித் தவித்துக் கொண்டிருந்தனர்.

காரியஸ்தர், தாம் செய்த தகாத காரியத்தை நினைந்து வெளிப்படையாக மனம் நோவ ஆரம்பித்தார். "பொன்னம்மாளுக்குத் திரும்பவும் நேத்திரம் தெரியுமாகில், எந்தவித அபராதத்திற்கும் நான் உள்ளாவேன்'' என்றார். சுமார் நூறுஜனங்கள் பொன்னம்மாள் வீட்டிற்குள் குழுமியிருந்தனர். தெருவில் சூத்திர ஜனங்கள் கூட்டம் ஒன்றிருந்தது. ஒரு ரூபாய் கற்பூரம் செலவாயிற்று. எங்கே பார்த்தாலும் சூடப் புகையும் சாம்பிராணிப் புகையுமே. 'பழனியாண்டவன் தான் கிருபை செய்யவேண்டும். பழனியாண்டவனே கதி' யென்றனர். "பழனி மலையானுக்கு அரோகரா தண்டாயுதபாணிக்கு அரோகரா'' என்ற சத்தமே சத்தமாயிருந்தது. காரியஸ்தருடைய மனம் பரி பூரணமாய் என்னப்பன் பாதாரவிந்தங்களில் பதிந்துவிட்டது. தன் மனைவி மேல் கொண்ட கெட்ட எண்ணங்களெல்லாம் காரியஸ்தரை நெருப்பில்போட்டு வாட்டுவதுபோல் வருத்தியது. பொன்னம்மாள் தான் ஒரு பாவத்தையும் அறியவில்லை யென்றும், தனக்கு நேத்திரம் தெரியாமற் போயிற்றே, எப்படிக் கோவிலுக்குப் போவது? எப்படிப் புருஷனுக்குப் பணிவிடை செய்வது? எப்படி தான் வாழ் நாளைக் குருடியாகக் கழிப்பது ? என்று நினைந்து கண்களினின்றும் மாலை மாலையாக நீர் வார்த்தவண்ணமாய் முருகா—குமாரா, அப்பனே—ஆண்டவனே, ஆறிருகை வேலனே ஷண்முகனே—சரவணபவனே, ஆண்டியே அடியார்க்குயிரே, தண்டாயுதா—தீனதயாளா,என்று சொல்லி, தவித்துத்தன்னையுருகினள்.

இவ்விதம் அந்த அகத்தில் உள்ள யாவருடைய மனமும் முருகப்பெரு மானிடமே சென்று ஐக்கிய மடைந்த சமயமாகிய ஒன்றேகால் மணிக்கு, சேதுராமையாவாள் மனங்களிக்க, ஊரார் மனம் பூரிக்க, பொன்னம்மாள் பேரில்முருகப்பெருமான்ஆவேசமாய்ஆவிர்ப்பவித்து,சிவதேஜஸ்ஜொலிக்க மல்லிகைமுல்லை, பாரிஜாதம், முதலிய மலர்களின் மணங்கமழ, 'பிழை பொறுத்தோம், சேதுராம்,' என்ற ஒரு சத்தம் ஊர் முழுதும், கேட்கக் கூடிய தொனியுடன் வெளிவந்தது. அதே நிலையில் பொன்னம்மாள் இருபது நிமிஷமிருந்தாள். பெரியவர்களும் சிறியவர்களும் விழுந்து நமஸ் கரித்தனர். தன்னை யறியாதிருந்த காரியஸ்தரும் பொன்னம்மாள் பாதத் தில் வீழ்ந்து, "அப்பனே! அபராதம் செய்தேன். பொறுக்கவேண்டும்" என்று கூறினார். தான் செய்த பிசகை இந்தச் சமயத்தில் வாய் விட்டுச் சொல்லி ஆறினார். மனைவியின் பரிபக்குவ நிலையையறியாத மூடனானேன், என்றார். குலதெய்வத்தை யிகழ்ந்ததைப்பற்றி மனம்வருந்தினார். எனக்குப் புத்தி வந்தது என்றார். ஐயரவாள் பூஜைக்குத் தாமும் தம் மனைவியும் நியமத்தோடு போய்த் தரிசனம் செய்வதாகவும் ஒருமண்டலம் பூஜா திரவி யங்கள் தாமேசேகரித்துக் கொடுப்பதாகவும், ஐயரவாள் பூஜையிலிருக்கும் பழனியாண்டவனுக்கு வெள்ளியினால் ஒரு பீடமும், திருவாசியும், நல்முத் து, பவழம் கட்டிய வெள்ளிக்குடையும், சுக்கிரவாரத்திற்குள் சேர்ப்பிப்ப தாகவும், பஹிரங்கமாகவும் பிரார்த்தனை செய்தார். தம்முடையவும் தம் மனைவியுடையவும் குற்றம் பொறுத்தருள வேண்டுமென்று கதறினார். ஆண்டவன் கிருபைக்குப் பாத்திரர்களாக்கிக்கொள்ள வேண்டுமென்று பிரார்த்தித்தார். பொன்னம்மாளுக்கு வந்த கஷ்டம் நிவர்த்தியாக வேண்டு மென்று இரங்கினார்.

இவ்வித நிலைமையில், காரியஸ்தரும் மற்றுமுள்ளோரும் பழனியாண் டவனைத் தோத்திரம் செய்துகொண் டிருந்த சமயத்தில் என் அப்பன் தயாநிதி, தற்போது பொன்னம்மாள் பேரில் ஆட்கொண்டிருந்த பிரபு, வாய் திறந்து "இது நம் சோதனை. அவமரியாதையாய்த் தெய்வத்தை நீ யிகழ்ந்த தவறுக்காகவே இவ்வளவுகஷ்டமும் நிகழ்ந்தது. நின்பிசகை நீயே நினைந்து வருந்தினதே போதுமானது. நீ என் தொண்டன். இந்தச் சரீர முடையவள் என் தொண்டி. ஐயரவாள் என் தொண்டர். உங்கள் பக்தியின் பெருமையை வெளிப்படுத்தவே இந்தத் திருவிளையாடலை யாம் செய்தோம். ஐயரவாள் பூஜையில் நீ செய்துவைக்கும் பீடமும், திருவா சியும், கொடையும், நம்திருவிளையாடலின் ஞாபகச்சின்னங்களா யிருக்கும். யாரை மறந்தாலும் என்னை மறக்கொணாது. பொன்னம்மாள் இழந்த இர ண்டு கண்களையும் மீண்டும் பெறுவாள். இதோ பார் அவள் கண்களை ஏ! பக்தா! பொன்னம்மாள் முருகம்மையாருடைய அம்சம் என்பதைத் தெரி ந்துகொள். ஈந்தேன் பிரசாதம்" என்றுசொல்லி பிரசாதம் ஈந்ததக்ஷணமே சுவாமிமலையேற ஆரம்பிக்கப் பொன்னம்மாள் சரீரம் கீழேவிழாதபடி அவள் தோழிகள் கைத்தாங்கலாகக் கீழே கிடத்தினார்கள். இரண்டு மணிக்குப் பொன்னம்மாளுக்குத் தன் ஞாபகம் வரவும், எழுந்து தன் கணவனையும், ஐயரவாளையும், மற்றப் பெரியவர்களையும் நமஸ்காரம்செய்து உள்ளேசென் றாள். அன்றுமுதல் காரியஸ்தரும் பொன்னம்மாளும் கரும்பை நுனியி லிருந்து தின்பவர் போல ஆண்டவன் அருளை நுகர்ந்துகொண்டு சுகமே

க்ஷேமமாய் இன்றைக்கும் பக்திசிரத்தையோடு முருகன் பதங்களைத் தொழுதுகொண்டு வத்திலக் குண்டில் வாழ்ந்து வருகின்றனர்.

சுபம்.

எண்ணுங் காரிய மினிது முடிக்கும்
அண்ணல் யானை முகத்தன் வாழி
மண்ணினை யளந்த மாலும் ஞானக்
கண்ணைக் கொடுக்கும் கந்தனும் வாழி.

**குறிப்பு**:—இஃது இராமசந்திர ஐயர், (N. S. Ramachendra Iyer, B.A., L.T., Vepary Madras.) அவர்களால் உதவப்பட்டது. இது உண்மையில் நடந்த விஷயமெனத் தெரிவதால் இதைப் பிரசுரித்தோம். கடவுளை நம்பி அவரிடம் மெய்ப்பக்தி பூண்டொழுகுவோர் கைவிடப் படார்களென்பதும், நமது நாடு எப்போதும மெய்ப்பக்தி நிலைத்தோங்கும் தெய்வீக நாடென்பதும், நமது மதக் கொள்கைகளின் உண்மையும் மகிமையும் இதனால் நன்கு விளங்குவது யாவர்க்கும் பக்தியை யூட்டுமென்று நம்புகிறோம்.

பத்திரிகாசிரியர்.

## வதுவை.

'பழயன கழிதலும் புதியன புகுதலும்' என்று ஒரு சூத்திர முண்டு. சிலர் இதையே ஆதாரமாகக் கொண்டு நம் மூதாதைகள் ஆதி தொட்டு அனுசரித்துவரும் வழக்கங்களை அறவே யொழித்து, சீர்திருத்தமும், நாகரீகமு முள்ளவர்களென்று கருதப் படுபவர்களிட மிருந்து நற்குணங்களை ஏற்றுக்கொள்ளாமல் நற்குணங்க ளல்லாதவைகளைச் சீக்கிரத்தில் பழக்கத்திற்குக் கொண்டுவர முயல்கிறார்கள்.

இப்படி நன்மையை நாடாமல் அவர்களிடமுள்ள கெடுதிகளைப் பின்பற்ற முயல்கிறார்கள். இவர்கள் அவர்களின் விவாவகத்திலுள்ள கெடுதிகளையும் பின்பற்ற முயல்கிறார்கள். நமது தாய்தந்தையர் தங்கள் பிள்ளைக்குக் கலியாணம் நடத்த வேண்டு மென்றால், பிள்ளைக்கு நிச்சயித்த பெண்ணை விவாகத்திற்கு முன் அவனுக்குக்காண்பித்து அவனுடைய விருப்பத்தை யறியாமல் மாட்டை விலைக்கு வாங்கி வருகிறது போல் பெண்ணை அழைத்துக்கொண்டு வந்து கலியாணப் பந்தலில்தான் அவனுக்குக் காண்பிக்கிறார்கள் என்று மேற்குத் தேசத்தாரைப் பின்பற்றுகிறவர்கள்சொல்லுகிறார்கள். இப்படி முன் பார்த்திராத பெண்ணை விவாகம் செய்தானபின்பு நாளடைவில் ஒருவர் ஒருவரைப் பார்த்து வார்த்தை யாடுவதினால் இச்சை ஏற்படுகிறது. சில சமயங்களில் இச்சை ஏற்படாமல் பிள்ளை தான் கொண்ட பெண்ணை வெறுத்து வேறொரு கலியாணம் செய்துகொள்ளக் கோருகிறான். ஆகையால், மேற்குத் தேசத்தார் தாங்கள் இச்சித்த பெண்ணையே வதுவை செய்து கொள்ளுகிறார்கள் என்று சிலர் சொல்லுகிறார்கள்.

மேற்குத் தேசத்தொருவன் நம்மவர்களைப் போலல்லாமல்,தான் இச்சித்த ஒருத்தியையே வதுவை செய்து கொள்ளுகிறான். அத்தேசத்தவர்களில் ஒரு புருடன் தானே சென்று ஒருத்தியை இச்சித்தபின் அவளையே விவாகம் செய்துகொள்ளுகிறான். இப்படிச் செல்லும் ஒருவன் தான் இச்சிக்கப்போகிறவள் சௌந்தரிய முள்ளவளாயிருக்கிறாளா என்பதைத் தான்

முதல் கவனிப்பான். குணத்தை அறியவேண்டுமானல் அவளோடு நெருங்கிச் சகவாசம் செய்யவேண்டும். இச்சித்த ஒருத்தி சுந்தர மில்லாதவளாக விருக்தால் அவளை நெருங்கப் போகிறதில்லை. இதனல் நாம் ஊகிப்பது யாதெனில் நாயகன் சுந்தரமுள்ள பெண்ணை விரும்புவான் என்பது. மேல்சொன்ன பிரகாரம் குணத்தைத் தெரிந்து கொள்ளுவதற்காகப் பெண்ணை நெருங்கி அவளுடன் வார்த்தை யாடவேண்டும். ஒருதுன்மார்க்கன் தனக்குவேண்டியபொருளை அடைவதற்காகத் தனவந்தனுடைய பெண்ணை யடைந்து தன்னுடைய சுயகுணத்தைக் காட்டாமல் நற்குணமுடையவன்போல் நடிப்பான். இவனுடைய துர்க்குணம் கோரியகாரியம் முடியும் வரையில் வெளிவாாமல் பிறகு வெளிவரும். பிறகு துர்க்குணமே உருவெடுத்தாற்போல் வந்துள்ள தன் நாயகன் மோசத்தால் தன்னை வென்ருனென்று தெரிந்து மனைவி விசனப்படுவாள். இப்படியே பெண்களிலும் துன்மார்க்கிகள் உண்டு.

இப்படி ஒருபுருடன் தான் இச்சித்தவளையே கலியாணம் செய்துகொள்ளுகிருனென்பது என்ன நிச்சயம்? இவர்களுடைய எண்ணம் தாய் தந்தையர்கள், இவர்களிடத்திலுள்ள துர்க்குணங்களைக் கண்டு தடுத்துவிடுகிறதினுலும், மரணம் முதலியவற்றினுலும் தடைப்படலாகும். பிள்ளையும், பெண்ணும் ஒருமைப்பட்டு புருடனும் மனைவியுமாக இரகசியத்திலிருக்கும்பொழுது, அவர்களுடைய தாய் தந்தையர்கள் இவர்களுடைய எண்ணத்திற்கு மாருக விடையளிப்பார்களானல் அவர்களுடைய எண்ணம் பூர்த்தியாகாமல் பயனற்றதாய் விடுகிறது. இவர்களுக்குள்ளும் தாய் தந்தையர்களுடைய சம்மதமில்லாமல் விவாக மில்லாததால் ஒருபுருடன் தானே பெண் பார்த்து விவாகம் செய்துகொள்ளுவது பொருத்த மில்லாததாய் விட்டது.

நம்மவர் வழக்கத்தை இனிக் கவனிப்போம். நாம், அவர்களைப்போல் நாமே பெண் பார்த்துக் கலியாணம் செய்து கொள்ளுகிறதில்லை. நமக்காக, நம்முடைய நன்மையைக் கோரும் தாய் தந்தையர்கள் பெண் பார்த்துக் கலியாணம் செய்து வைக்கிருர்கள். நம்முடைய க்ஷேமமும், நன்மையும் அவர்களைப்பொருந்தினவை. அவர்களாலான நம்முடைய பிறப்பையும் வளர்ச்சியையும், எப்படி நாம் ஒத்துக் கொள்ளுகிருேமோ அதே மாதிரியாக அவர்களால் தெரிந்தெடுக்கப்பட்ட பெண்ணையும் நாம் ஒத்துக்கொள்ளவேண்டியது. ஒரு தகப்பன் தன்னுடைய மகனுக்கு மருந்தைக் கொடுப்பதற்குப் பதிலாக விஷத்தைக் கொடுப்பானு? கொடுக்கமாட்டான். அதே மாதிரியாகவே இது விஷயத்திலும் நாம் அவனை நம்பவேண்டும். தந்தை நம்முடைய நன்மையையே கருதுவானே யல்லாமல் கேடு ஒருகாலும் நினைக்கமாட்டான்.

நம்மவர்களில் நெருங்கிய பந்துக்களிலதான் விவாகம் நடப்பது வழக்கம். தாய் தந்தையர்கள் சிறுபிராயத்திலிருந்தே பெண்ணையும் பிள்ளையையும் குறிப்பிட்டு அவர்களுடைய குணங்களைக் கவனித்து வருகிருர்கள். நாம் மேல்நாட்டார்களைப் போலல்லாமல் விவாகம் செய்து கொண்டவர்களை இச்சிக்கிருேம். இதற்காக, ஓரிடத்தில் ஆங்கிலேயத்தில் கீழ் வருமாறு சொல்லியிருக்கிறது. "It is nobler to love whom you marry than to marry whom you love." நமக்காக நம்முடைய தாய் தந்தையர்களால் குறிப்பிட்டவர்களைச் சிறுவயதில் சந்தித்து, அவர்களுடைய குணங்களையும்

விருப்பத்தையும்அறியச்சமயம்ஏற்படுகிறது.அன்னியசம்பந்தத்தால்அநேக கெடுதிகள் நேரிடுவதால் அது நீக்கப்பட்டது. என்ருலும் முற்றும் நீக்கப் படவில்லை. அப்படிச் சம்பந்தம் நேரிட்டாலும், பெண்ணின் குணத்தைக் கேட்டும் பார்த்தும் அறிய நம்முடைய தாய் தந்தையர்கள் அவர்களிடம் செல்லுகிருர்கள். இவர்களுக்கு இப்புது சம்பந்தம் திருப்தியாஞல் சம் பந்தம் ஏற்படுகிறது. இப்படிப் புதுசம்பந்தம் உண்டான பின்பு புருடனுக் கும் மனைவிக்கும் இச்சை நாளடைவில் பெருகுகிறது. நம்மவர்கள் விவா கத்திற்கு முன் ஒருவரை நேரில் பார்த்து இச்சிக்காததினுல், அவர்களுக்கு விவாகம் முடிந்தபின்பு ஒருவரை ஒருவர் நேரில் பார்த்து இச்சிக்கச் சாத னம் ஏற்படுகிறது.

நமது கலியாணம் மதத்தால் கட்டுப்பட்டுள்ளது; என்றும் நீடித் துள்ளது. மேற்குத் தேசத்தாரது அப்படியல்ல. நாயகனுக்கும் நாயகிக்கும் வெறுப்பு உண்டானுலும் அல்லது விருப்ப மில்லாமல் போனுலும் அவர் கள் ஒருவர் ஒருவரை நீக்கி (Divoce) வேருெரு கலியாணம் செய்து கொள்ளுவார்கள். விவாகம் ஆகாததற்குமுன் பெண்ணைக்கண்டு அவளுடன் பேசுவதும், தனித்து இருவரும் உலாவப் போவதும் அவர்களிட முண்டு. அது நம்மவர்களிடத்திலில்லை. அதனுல் நேரிடும் பயங்கரமான கெடுதி களும் நம்மில் இல்லை. கலியாணம் ஆகாததற்குமுன்,ஒருவன்தான் நேசித்த ஒருத்திக்கு வாக்களித்துப் பின் வாக்குறுதியை மீறி நடக்கிருன். இவ னுடைய வாக்குறுதியை நம்பிக கைவிடப்பட்டபோது அப்பெண்ணின் நிலைமை பரிதபிக்கத் தக்கதாகிறது. இத்தகைய குற்றங்கள் நம் மூதாதை கள் ஏற்படுத்தியுள்ள ஏற்பாட்டில் கிடையாது. பார்க்குமிடத்து அவர்கள் வழக்கங்களிலுள்ள கெடுதிகள் நம்மது ஆகார ஒழுக்கங்களிலில்லை. பிழை பொறுக்க.

**V. G. Gajaraj.**

---

## மாதர் மேன்மை.

(474-ம் பக்கத் தொடர்ச்சி.)

17. எந்தக் காலம் வரை பெண்கள் முகமலர்ச்சி யில்லா திருக்கின்ற னரோ அந்தக் காலம் வரை உலகம் சூனியப் பிரதேசமாகவே இருக்கும், மனிதரோ முயற்சி யற்றவர்களா யிருப்பார்கள். (காம்பெல்.)

18. உலகத்தை யலங்கரிப்பவர்கள் ஸ்திரீ ரத்தினங்களே! அவர்கள் நடந்து கொள்ளுங் கிரமத்தை யொத்தே அவர்களில் புருஷர்களுடைய இல்வாழ்க்கையும் இன்ப துன்பங்களும் அமைகின்றன. (ஸ்ரீரங்கம் S.O.R.)

19. நித்திரை விட்டெழுஞ் சமயம் பிறதெய்வத்தை வணங்காளாகித் தனது தெய்வமாகிய கணவனைத் தொழுது எழும் பெண்ணொருத்தி "பெய்" என்று சொல்ல மழை பெய்யும். (திருவள்ளுவ நாயனர்.)

20. நற்குண மடைந்த மனையவளை இல்லாதவனுடைய இல்லறம், எவ்வளவு பெருமை யுடையதா யிருப்பினும் பிரயோஜனமில்லை; அவ்வில் லம் அரிதாகியதோர் காட்டுக்கே ஒப்பாம். (நாலடியார்.)

21. ஒருவன் இல்வாழ்க்கையை நடத்த வேண்டுவதற்கு நற்குண நற்செய்கை யுடைய மனையாளே யன்றி மற்றவையில்லை; ஒருவன் அடைய வேண்டிய பாக்கியங்களுக்குள் கற்புடைய மனைவியைப் பார்க்கினும் உயர்வாகிய பொருள்கள் இவ்வுலகத்தில் ஒன்றுமில்லை. (திருவள்ளுவ நாயனார்.)

இன்னும் பலவுள ஆயினும் இத்துடன் நிறுத்தி, நாம் எடுத்துக் கொண்ட இவ்விஷயம் முடிவுபெற மேலே எழுதிச் செல்லுகிறோம்.

நேயர்களே! இத்தகைய அபூர்வ சக்திகளை யடைந்த நம் பெண்மக்களுக்கன்றோ தற்காலத்தில் கிறிஸ்துவேதம் போதிக்கப்பட்டு வருகிறது. பெண்களின் அரிய குணங்கள், ஊன்றிப்பார்த்த சில அறிவாளிகட்கும் நம் முன்னோர்களுக்கு மட்டுமே தெரிந்திருக்கிறது. இக்காலத்தவர்களில் சிலர் பெண்களை அவமதிக்கிறார்கள். அந்தோ! சில பெண்கள் அவமதிக்கும்படியுஞ் செய்து கொள்ளுகிறார்கள்! காரணம், மார்க்க போதனை யின்மையும், கல்வி யில்லாக் குறையுமே யென்று தெரிகிறது. இக்கல்வி யில்லாக் குறையொன்றை நிவர்த்திப்பதற்காகச் செய்ய வேண்டிய வழிகளைச் செய்யாது அன்னிய மதஸ்தர்களிடம் நம்மக்களைக் கல்வி பயில ஒப்புவிக்கும் செய்கையானது, புத்திர பாக்கியமடையச்சென்று புருடனைப் பறிகொடுத்தக் கதையைப்போல வந்து முடிகிறது. நம்மவர்க்குள் சில ஆண்டுகளாக நடைபெற்று வருகிற இக் கொடிய செய்கை என்றைக்குத் தான் ஒழியும்? நேயர்களே! என்றைக்கு ஒழியும்?

“நான் இந்தியாவிற் பிறந்து வளர்ந்தவன்; என்னுடைய தேசம் இந்திய தேசம்; என்னுடைய மதம் இந்து மதம்; என்னுடைய பாஷை இந்திய பாஷை; என்னுடைய இரத்தம் இந்திய இரத்தம்; ஆகையினால் நான் இந்தியன்” என்று சொல்லக்கூடிய மஹத்துவம்பொருந்திய பாக்கியத்தை யடைந்த ஒவ்வொரு இந்து சகோதரரும் நம்மார்க்கத்தைக் காப்பாற்றும் விஷயத்தில் கங்கணங்கட்டி, நம்மக்களைப் பாதிரிமார்களின் பாடசாலைகளுக்கு அனுப்பாமலும், பைபில் உமன் மூலமாக நம் மக்களுக்குப் பாடங் கற்பியாமலும் இருக்கும் நாள் எந்த நாளோ அன்றைக்கே இக்கொடியசெய்கை அறவே யொழியும். நம் அருமை மக்களைப் புறமதஸ்தர்கள் அபகரித்துச் செல்வதால் நம்மிந்து மார்க்கம் என்ன கதியாகுமென்று சிந்தித்துப் பாருங்கள். பெண்கள் இல்லாத வீட்டின் நிலைமையைக் குறித்ததாய் இருக்கும் பெண்கள் சிதறி யழிந்த மார்க்கம்.

கனம் மாயூரம் முனிசிப் வேதநாயகம் பிள்ளை அவர்கள் தாம் எழுதிய பிரதாப முதலியார் சரித்திரத்தில் “எமனுக்கு தர்மராஜன் என்று பெயர் கொடுத்ததுபோல் இருக்கிறது.........” என்று வரைந்திருக்கிறார்கள்; ஆனால் சமீபகாலத்தில் ஒரு ஸ்திரீயின் உடல் உயிர் இரண்டையும் பெற்றோர் அல்லது புருஷனிடமிருந்து பிரிக்குஞ் சிலரின் செய்கைகளை கவனித்திருப்பின் அப்பேரறிவாளர் அவ்விதம் வரைந்திருக்கமாட்டாரென்பதே எமது துணிபு. கூடிய சீக்கிரம் நாம் இது விஷயத்திற்காகச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யவேண்டும்; இல்லாவிடில் பின்னால் பெருந்துயர் அடைய நேரிடுமென்பது சத்தியம்.

நேயர்களே! “இந்தியாவின் பதம் ஸ்திரீகளின் காவலி லிருக்கிறது. நாம் ஆடவர்களுக்கு எவ்வளவுதான் பொருட்செலவு செய்து கல்வி கற்

பித்து, பைபிலைப் போதிக்கினும் அவர்கள் பாடசாலையை விட்டு உலக விஷயங்களில் நுழைந்தால், தாம் வாசித்த பைபில் எந்த மூலையிலிருக்கிற தென்றுகூட கவனிக்கிறதில்லை. எவ்வளவு பொருட் செலவு செய்தாலும், இந்திய வாலிபர்களைக் கிறிஸ்தவர்களாக்க முடியாது. ஆதலால், நாம் ஆடவர்களை நமதுமதத்தில் சேர்ப்பதற்காக விருதாவாகப்பொருளைச்செல விடுவதை நீக்கிப் பெண்களுக்காகச் செலவு செய்து, நமது மார்க்கத்தைப் போதிக்கில், அவர்கள் தங்கள் காவலைக் கைவிட நேரிடும்; அது சமயம் நம் முயற்சியுங் கைகூடலாம்...'......" என்று அமெரிக்காவில் ஒரு கிறிஸ் தவப் பாதிரியார் தமது மத சங்கத்தின் முன்பு பிரசங்கித் திருக்கிறார்.

உள்ளபடியே இவ்விஷயம் நமதுள்ளத்தில், கூரிய வாள் போல ஊடுருவிப் பாயவில்லையா? கருணைநிதியாகிய பரம் பொருளுக்கு, இவ்விஷ யம் சம்மதமாகுமா? இவர்கள் மார்க்கத்தைப் போதிப் பார்களாம், ஸ்திரீகள் காவலைக் கைவிடுவார்களாம், இவர்கள் முயற்சியுங் கைகூடலாகு மாம். என்னே இவர்களின் எண்ணம்! சகோதர சகோதரிகளே! இப் பொழுதாவது இவர்கள் கல்வி கற்றுக்கொடுக்கும் நோக்கம் இன்னதென்று நம்மவர்களுக்குத் தெரிகிறதா?

இவர்கள் மார்க்கத்தைப் போதிப்பதினாலேயே ஸ்திரீகள் காவலைக் கைவிடுவார்களென்பதும், கைவிட்ட இந்து மார்க்கம் இந்தியாவை விட்டு ஸ்டீமர் பிரயாணஞ்செய்யு மென்பதும் நினைத்துக் கொண்டே நித்திரை செய்தால், ஒருகால் கனவில் காணலாமே யன்றி உண்மையில் நடக்கும் என்றெதிர்பார்க்கக்கூடிய விஷயமல்ல. கவரிமான் தன்னுடைய உரோமத்தையும், வேங்கை தன்னுடைய தோலையும், சுத்த வீரன் தன்னுடைய கையாயுதத்தையும், உத்தமஸ்திரீகள் தங்களின் * காவலையும் உயிர் விட்ட பின்பு தான் கைவிடுவார்கள்! ஆ! என்ன நம் இந்தியப் பெண்களின் துரதிஷ்டம்.

இதுவரையில் நம் பெண்மக்களிற் பெரும்பான்மையோரை, ஈவு இரக்கமற்ற பேய்கள் மட்டும் பிடித்தாட்டி, அலக்கழித்து, துன்புறுத்தி வந்தது; இனி பகுத்தறிவுடைய மனுஷஜன்மங்களில் சிலர்கூட நம் இந்தியப்பெண்களை இம்சிப்பதாயின், இப்பெருங்குறையை மனமெரியஆண்டவனிடத்தில் ஒப்பிப்பதன்றி மற்றென் செய்யக்கடவோம்.

நேயர்களே! இந்துதேசத்தில் கிறிஸ்துமார்க்கம்விசேஷப்பிரபல்யம், கி. பி. 13-ம் நூற்றாண்டு முதல் வியாபித்துவருகிறது. சுமார் 600 வருடங்களாக நடந்த சுவிசேஷப் பிரபல்ய முயற்சியின் பயனாகவும், ஏராளமான பொருட்செலவின் பலனாகவும் இந்தியாவில் நூற்றுக்கு ஒருவர் கிறிஸ்து மார்க்கத்தினர்க ளாயிருக்கிறார்கள். இவர்களிலும், இந்துக்கள்,ஜாதிவித்தியாசத்தால் புறக்கணிக்கப்பட்ட பஞ்சம சகோதரர்களே பெரும்பான்மையோராக விருக்கின்றனர். இதில் அனேகர் பஞ்ச காலங்களில் ஆகாரத்தினிமித்தம் வேறு மதத்தில் சேர்ந்து கொண்டவர்களே யன்றி மதத்தையுணர்ந்து சென்றவர்களல்ல. ஆனால், இந்துமார்க்கமோ கொடுக்கக் கொடுக்கக் குறைவதில்லை. அதாவது 1901ம் வருட ஜனசங்கையின்படி

* காவல்—நன்னெறி.

இருந்த ஜனத்தொகையைவிட 1911ம் வருட ஜனசங்கையில் 100க்கு 5 வீதம் பெருகியிருக்கிறது. இதனால் நாம் அறிந்துகொண்டதென்ன வெனில், நம்மார்கத்தினர்களால் பெற்றுவளர்க்கப்பட்ட மக்களிற்சிலர் அன்னிய மார்க்கத்தினர்களால் அபகரிக்கப் படினும், நம் மார்க்கத்தினர் ஒருபோதும் குறைந்தவர்களல்ல வென்பதே !

## இனி நாம் செய்யவேண்டிய விஷயங்கள் மூன்று.

1. "என்னுடைய மக்களுக்கும், என் சுற்றத்தார்களின் மக்களுக்கும் அன்னியமார்க்கம் போதிப்பவர்களைக் கொண்டு கல்வி போதிப்பதில்லை என்று நாம் ஒவ்வொருவரும் சத்தியம் செய்து, இந்துமார்க்க வைராக்கியத்தை நம் ஹிருதயத்தில் ஆபரணமாக அணிந்து அதைப் போற்றி வரவேண்டியது நமது முக்கியகடமை.

2. ஒவ்வொரு சந்தாதாரர்களும், அவரவர்கள் சக்திக்குத் தகுந்தவாறு ஆனந்தபோதினி ஆபீஸின் மூலமாக "இந்து சகோதரர்களே ! எச்சரிக்கை" என்ற துண்டுப் பத்திரிகைகள் வரவழைத்துத் தாம் வசிக்குமிடங்களில் பிரசுரப்படுத்த வேண்டும். தேசாபிமானமும் மதாபிமானமும் நிறைந்த நம் ஆனந்தனின் மாதாபிதாக்கள், இத்துண்டுப் பத்திரிகைகளில், பணம் அனுப்பி ஆர்டர் செய்வோரின் பெயரை அச்சடித்து, அச்சு அடுக்கும் கூலிஇல்லாமல், காகித கிரயமும், அச்சு அடிகூலியுமட்டுமே, பொது நன்மையைக்கருதிப் பெற்றுக்கொண்டு, ஷை பத்திரிகைகளை, நம் வேண்டுகோளின் பேரில் அனுப்பி வைப்பார்கள்.

3. ஒவ்வொரு ஊர்களிலும் இந்து மதாபிமான எலிமெண்டரி பாடசாலைகள் தற்காலத்தில் ஸ்தாபிக்கவேண்டும். பாடசாலைகள்ஸ்தாபித்திருக்கும் இந்துமதாபிமான நேயர்கள் பிள்ளைகளுக்கு மார்க்கபோதனைப் புஸ்தகங்களைக் கட்டாய பாடமாக வைக்கவேண்டும்.

பாடசாலைகளை ஸ்தாபித்து நடத்துபவர் நம்மவரில் மிகச்சிலரேயாவர். இந்தியர்கள் முன்னேற்ற மடைய வேண்டுவதாயின், பாடசாலைகளை ஸ்தாபிக்க பலகனவான்கள் முன்னேறி வரவேண்டும். "குஜராத் மாகாணத்தில் ஒரு சர்வகலாசாலை இந்திய மாதர்களுக்காக ஏற்படுத்துவதற்குஸர் விட்டல்தாஸ் என்ற கனவான் 15 இலட்சம் ரூபாய் நன்கொடை யளித்திருக்கிறார்." என்று கேள்விப்பட்ட நம் மனம் எவ்வளவு சந்துஷ்டியடைகிறது ?

இதுவன்றோ தருமத்துக்குச் சிறந்தவழி! "ஒரு பாடசாலையைத் திறக்கிறவன், ஒரு சிறைச்சாலையை மூடுகிறான்" என்பது எவ்வளவு அருமையான முதுமொழி !

நேயர்களே ! இம்மூன்றினுள் துண்டுப் பிரசுரங்கள் வெளியிடவேண்டிய விஷயம் மிகவும் அவசரமா யிருப்பதால், ஒவ்வொரு சந்தாதாரரும் தங்கள் கடமையை அதிசீக்கிரம் செய்து இந்திய மக்களைக் காப்பாற்றும் பாக்கியத்தை யடையுங்கள். பலமுறை ஸ்தலயாத்திரை போய் வருவதும், சுவாமிக்கு உத்சவம் செய்வதுங்கூட இத்தகைய கைங்கரியத்துக்கு ஈடாகாது என்று ஒரு பெரியார் கூறுகின்றனர்.

சகோதர சகோதரிகளே! கடந்தமாதத்துடன் நம் ஆனந்தபோதினிக்கு, ஆண்டு ஐந்து இனிது முடிந்து, ஆறுவதாண்டு நடைபெற்றிருப்பதால், நாம் வருடாவருடஞ் செய்துவரும் வழக்கம்போலவே இவ்வருடமும், 5-ம் தடவையாக ஒவ்வொருவரும் ஒவ்வொரு சந்தாதாரரைச் சேர்த்து, மாதம் ஒன்றுக்கு இரண்டணுவுக்குங் குறைந்து செலுத்தி, அளவற்ற பாக்கியங்களை நாம் பெறுவதைப்போலவே, நம் சகோதரர்களையும் பெறச்செய்து மகிழ்வெய்துவோமாக!

ஒரு தேசம் முன்னேற்ற மடைவதற்கு, அத்தேசத்து ஸ்திரீரத்தினங்களின் மேன்மையும், பத்திரிகைகளின் அபிவிர்த்தியுமே காரணமாதலால், நாம் இது விஷயத்தில் எடுத்துக்கொள்ளும் முயற்சிகள் யினிது நிறைவேற, எல்லாம் வல்ல இறைவனின் திருப்பாத மலர்களை என்றென்றும் பிரார்த்திப்போமாக! சுபம்!

K. A. P. விஸ்வநாதன்.

நெ. 58, தஞ்சாவூர்ரோட், திருச்சிராப்பள்ளி.

---

## புருஷர்கள் அறியவேண்டிய சில விஷயங்கள்.

1. மாதா பிதா பாட்டன் பாட்டி முதலானவர்கள் இளமையிற் செய்த நன்றியை மறந்து தன் பெண்சாதியே பெரிதென நினைத்துஅவர்களைக் கண்ணெடுத்துப் பாராமல் இருப்பது கூடாது.

2. மனைவிக்குப் பாவமிதுவென்றும், புண்ணியமிதுவென்றும், அவற்றினுற் பெறும்பயன் இதுவென்றும் போதித்தல் வேண்டும்.

3. குதர்க்கம் பேசுதல், நிந்தித்தல், சோம்பல், காமம், அகங்காரம், வீண்பெருமை முதலிய துர்ச்செய்கைகள் கூடா.

4. மனைவியிடம் தோற்றும் சிறிய சிறிய குற்றங்களை அப்போதைக்கப்போது எடுத்துக்காட்டி நீக்க வேண்டும்.

5. ஒரு நல்ல காரியத்தை நிறைவேற்ற முயலும்போதும், மற்றக் காலங்களிலும் நேரிடும் இடையூறு, துன்பம் முதலியவற்றிற்கு அஞ்சாதிருத்தல் வேண்டும்.

6. சிறுவரைக் கண்டிக்கும்போதும், பயப்படுத்தும் போதும் இழிவான வார்த்தைகளை உபயோகிப்பது கூடாது.

7. செல்வம் வந்த காலத்தில் செருக்கடையாம லிருப்பதும், பிறருக்கு அவமானம் வராது பேசுவதுமாகிய இவைகளை மனதில் வைத்தல் வேண்டும்.

8. வறுமையால் எவ்வளவு சிறுமைப்பட் டிருந்தாலும் தன்னுல் இயன்றமட்டும் பிறர்க்கு உதவி புரிதலோடு அகௌரவ காரியங்களைச் செய்யலாகாது.

9. யாவரிடத்திலும் அன்பாயிருப்பவனை ஏதோ காசுபணம் வாங்கத்தா னிப்படி நடிக்கிறா னென்றும், அதிகமாய்ப் பேசினால் வாயாடியென்றும் இழித்துக் கூறக் கூடாது.

10. நல்லவரெனத் தெரிந்து ஒருவரை நட்புசெய்து கொண்டால் மறுபடி எப்போதும் அந்த நட்பைக் கைவிடுதல் கூடாது.

11. மறைக்கவேண்டிய விஷயங்களுள்ள வேலையில் பிரவேசித்தலும், மறைக்கவேண்டிய விஷயங்களுள்ள வார்த்தைகளை யொருவரிடம் சொல்வதும் கூடாது.

12. எப்பொழுதும் பக்கத்து வீட்டுக்காரர்களையும், கற்றோரையும், பெரியோரையும், துஷ்டரையும் பகைத்துக் கொள்ளுதலும், அலட்சியமாகப் பேசுவதும் கூடாது.

13. அடைக்கலம் புகுந்தவரை அன்போடு ஆதரிக்கவேண்டும். ஒருவருடைய குற்றங்குறைகளைப் பற்றி பேசக் கூடாது.

14. யாராவது ஒருவர் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்குமுன் வலிய உன் மனதிலுள்ள அபிப்பிராயங்களை வெளிவிடுதல் கூடாது.

15. ஒருவனை நேரில் கண்டபொழுது முகமலர்ச்சியுடன் பேசிவிட்டு அவன் போனபின்பு அவனையே இழிவாகப் பேசுதல் இழிகுலத்தான் செய்கையாகும்.

16. எந்தக் காரியம் செய்வதா யிருந்தாலும் தனக்குப் பாபமாவது அகௌரவமாவது,தனக்காவது பிறர்க்காவதுதீங்கேனும் நேரிடாவண்ணம் தனக்குள் சிந்தித்துத் தன் தீர்மானப்படியே செய்யவேண்டும்.

17. ஏழைகளிடத்திலும், நமக்குக் கீழ் ஜாதியாரிடத்திலும் அன்பும், இரக்கமும் முகமலர்ச்சியுங் காட்டிப் பேசுதல் வேண்டும்.

18. நமது தொழிலைச் சேர்ந்த விஷயத்திலும், குடும்ப விஷயமல்லாத வேறு விஷயங்களிலும் ஸ்திரீயின் அபிப்பிராயங் கேட்பதாலும், அவற்றைப்பற்றி ஸ்திரீயிடம் பேசுவதாலும் காரிய பங்கமும் அவமானமுமே சித்திக்கும் என்பதை மறக்கலாகாது.

19. தன் மனைவி எந்த விஷயத்திலும் தன் கட்டளையை மறுக்காமல் நடக்கும் வண்ணம் பழக்கிவைக்காதவன் அவளுக்கும் தனக்கும் பாபத்தை யுண்டாக்கிக் கொள்கிறான்.

20. தாய் தந்தையர்களின் மனம் வேதனைப் படும்படி நடந்துகொள்பவனுடைய க்ஷேமம் நீடித்திராது. அவர்கள் மனம் சந்தோஷப்படும் வண்ணம் நடந்து கொள்பவன் கடவுள் அருளைப்பெறுவான்.

S. ரங்கப்ப நாயகர்,
வளியாம்பாளையம்.

## இல்லறம்—விவாகம்.

(446-ம் பக்கத்தொடர்ச்சி)

மேலே கூறியபடி இந்த விவாகத்தால் பெண்களுக்குப் பயன்யாதோ வெனிற் கூறுதும். விவாகமே ஸ்திரீகளுக்கு உபநயன ஸம்ஸ்காரமாம். உபநயனமென்பது உதவி நேத்திரமென்று பொருள்தரும். அதாவது பரப்பிரமத்தைத் தரிசித்தற்குரிய ஞானக்கண். இந்த உபநயன ஸம்ஸ்காரம் புருஷர்களுக்குக் கர்ப்பத்திலிருந்து எட்டாம் வயது, அல்லது பிறந்ததுமுதல் எட்டாவது வயதில் செய்யப்பட வேண்டும். அப்பொழுதே பிரமோபதேசமும் செய்வது. அது முதல் அவன் பிரமசரிய விரதத்தை யனுஷ்டித்து வேதாந்த கலைகளையோதி குரு சிஸ்ருஷையைச்செய்யவேண்டும். இதைத்தான் குருகுலவாசம் என்பர். அது முதல் அவன் தன் மாதாபிதாக்களை விட்டுப் பிரிந்து ஒரு குருவையடைந்து, அவரைவிட்டுப் பிரியாம லிருக்க வேண்டும். குருவின் பணிவிடைகளைத் தவறாமல் செய்யவேண்டும். குருவின் கட்டளையை அதிக்கிரமித்து நடக்கக்கூடாது. அந்தக் குருவையே தெய்வமாக வழிபட வேண்டும். அப்படிச் செய்து காயத்திரியாதி மந்திர சித்தியை யடையவேண்டும்; ஊரும் பெயரும் உருவமும் குணமுமில்லாத பரப்பிரமத்தை ஊனக்கண்களால் காணமுடியாது. ஆகையால் குருவையே தெய்வ வடிவமாகப் பாவிக்கவேண்டும். இது பிரமத்தின் சகுணசொரூப உபாசனையாம். அவ்வுபாசனையில் நிலைபெற்று மனச்சலன மொழிந்தபின் ஞானத்தால் அறியப்படும் நிர்க்குணப் பிரமோபாசனை செய்யவேண்டும். இதுவே மோட்சத்துக்கு வழியாகும். அன்றியும் சகல சித்திகளுக்கும் வழியாகும்.

ஸ்திரீகளுக்குத் தனியே உபநயன ஸம்ஸ்காரம் கிடையாது. விவாகமே உபநயனமாகும். அதனாலேதான் புருஷர்களுக்கு உபநயனஞ்செய்ய விதிக்கப்பட்ட எட்டாவது வயதிலே பெண்களுக்கு விவாகம்செய்யவேண்டுமென்கிற விதியேற்பட்டது. இதனாலே விவாகமும் உபநயனமும் ஒன்றே யென்பது புலப்படும். இது பற்றியே, "உபநயனத்திற் குரியகாலமெதுவோ அதுவே ஸ்திரீகளின் விவாகத்துக்கு எற்றகாலம்" என்று வியாக்கிரபாதர் கூறினர். "பெண்களுக்கு உபநயனத்திற்குப் பதிலாக விவாகம் நியமிக்கப்பட்டது" என்று மநு கூறினர். "பெண்களுக்கு விவாகம் செய்வதே உபநயனமாக இருப்பதால் கர்ப்பமுதல் எட்டாவது வயது அல்லது ஜனனம்தொடங்கி எட்டாவது வயதுதான் அவர்களுக்கு விவாகத்துக்குரிய காலமென்று யமஸ்மிருதிகூறியது.பெண்கள் பிரமவாதினி,சத்தியோவதூ என்று இருவகையாவார். பிரமவாதினிக்குக் கிரமமான உபநயனமும், அக்கினியாராதனையும், வேதமோதுதலும், தன் சுற்றத்தார் வீட்டில் பிக்ஷையெடுத்துப் புசித்தலும் விதிக்கப்பட்டன. சத்தியோவதூ என்பவர்களுக்கு விவாக காலத்தில் உபநயனச் சடங்குகளைச் சுருக்கமாகச் செய்து உடனே முடித்துவிட்டு விவாகச் சடங்கு தொடங்கி நடத்தவேண்டும். இது முன் கற்பங்களில் நடந்தது என்று ஹாரீத ஸ்மிருதி கூறுகின்றது. "முன்கற்பத்தில் ஸ்திரீகளுக்கு மௌஞ்சீபந்தனம் (உபநயனம்) இருந்ததுடன் வேதமோதுதலும், காயத்திரி ஜபஞ்செய்தலு மிருந்தன. அவர்களுக்கு வேதாதி கலைகளை யோதுவிப்பவர் சகோதரர், பிதா, சிற்றப்பன்

பெரியதகப்பன் இவர்களுள் ஒருவரா யிருக்கவேண்டுமே யன்றி அந்நியர் கூடாது. அவ்வாறு படித்துவருகிற பெண் கன்னியாகத் தன் பிதாவின் வீட்டி லிருந்துகொண்டே பிக்ஷையெடுத்துப் புசிக்கவேண்டும். இவைகள் மட்டும் அவர்களுக்கு விதிக்கப்பட்டனவே யன்றிப், பிரமசாரிகளுக் குரிய மான்தோல், மரவுரி, சடை முதலியன விதிக்கப்படவில்லை.'' என்று யமஸ்மிருதி கூறுகின்றது. ''புருஷர்களுக்குச் செய்யவேண்டிய ஸம்ஸ்கா ரங்களெல்லாம் ஸ்திரீகளுக்கும் செய்ய வேண்டும். ஏனெனில் இவை கர்ப் பத்தாலுண்டாகும் தோஷங்களைப் போக்குமாதலால். ஆனால் விவாகம் ஒன்றுமாத்திரமே ஸ்திரீகளுக்கு வேதமந்திர பூர்வகமாகச் செய்விக்க வேண் டும்'' என்று ஸ்மிருதியர்த்தசாரம் கூறுகின்றது. இதனால் பூர்வகற்பங்க ளில் ஸ்திரீகளுக்கும் புருஷர்களுக்குப் போலவே உபநயனமும் வேதாத் தியயனமும் விதிக்கப்பட் டிருந்தன என்பதும், அவை கர்ப்பந்தொடங்கி அல்லது ஜனனந்தொடங்கி எட்டாம் வயதிலேயே செய்யப்பட்டனவென் பதும் அறியலாகும். ஆதலால் கௌரிவிவாகம் பூர்வ கற்பங்களிலும் சிரே ஷ்டமாகக் கொண்டாடப்பட்டு வந்தது என்று முணரலாம். இதுகாறும் கூறிய வதனாலே ஸ்திரீகளுக்கு விவாகமே உபநயனம் என்பது புலப்படும்.

நாமரூபக் கிரியையற்ற சுத்தப்பிரமத்தைத் தரிசிப்பிப்பதே உபநயனக் கிரியை என்று வேதாதிநூல்கள் கூறுகின்றன. எவ்வாறு தரிசிப்பிப்பது எனில் பிரமத்துக்கு நிர்க்குணம் சகுணம் என்று இருவகைச் சொரூப முண்டு. நிர்க்குண சொரூபமாவது மனோவாக்குக் காயங்களுக்கு எட்டாத சச்சிதானந்த சொரூபம். அந்தச் சொரூபத்தை யறிவதே மோட்சமெனப் படும். அது பூர்வமெடுத்த அநந்தகோடி ஜனனங்களிற் செய்த மஹாபுண் ணியாத்மாக்களுக்கே எளிதில் சித்திக்கும். ஏனையர்க்குச் சித்திப்பது அரிது. அவர்கள் சகுணோபாசனைசெய்து அதனால் ஞானத்தை யடைந்து பின் நிர்க்குண சொரூபத்தைத் தரிசிப்பது முறை. சகுணமென்பது மனி தரைப்போலக் கரசரணாதி அவயவங்களுடன்கூடியசொரூபம். அதுவேதங் கூறிய உமாசகாயன், இலட்சுமிகாந்தன் முதலிய சொரூபங்கள். இந்திரன் பிரமன் முதலிய பல சொரூபங்களுமாம். இது உபாசனபலத்தினால் பிரத் தியட்சமாகக் கூடியது. ஆதலால் கஷ்டசாத்தியமாம். விக்கிரகம் முதலிய சொரூபங்களும் அவ்வகையிற் சேர்ந்தனவே. இவையெல்லாம் நெடுநாட் கள் பக்திசெய்து சித்திபெறத்தக்கன. பின்னை உபநயனகாலத்தில் தரிசிப் பிக்கப்படும் சொரூபம் யாதெனில் குரு சொரூபமேயாம். இம்மூன்று சொரூபங்களையும் குரு லிங்க பக்தியென்பர். பரப்பிரமசொரூபத்தை யுணர் த்துவது அதையறிந்தவர்க்கே தகுதியாம். இந்தக் குரு சதானந்த நிஷ்டை யினால் பிரமத்தோடு ஏகோபவித் திருப்பர். இவரது சரீரம் பிரமத்துக் காலயம் போலும். ஆதலால் குருவே பிரமமாம். அவரை யாராதித்துப் பேறு பெற்றவர்களே பூர்வகாலத்திலுள்ள மஹாரிஷிகள் எல்லாரும். அக் காலத்தில் வேதமோதிக் குருகுலவாசம் செய்து, குருபணிவிடை முடித்து, அவரது அனுக்கிரகத்தினால் சகல சித்திகளையும் அடையாத பிராமணர்கள் காணப்படுவதருமை. தனக்கு எந்தக் குரு கிடைத்தாரோ அவரையே பரப் பிரமமாகக்கருதி வழிபடுவதே பிரமசரிய விரதத்தின் பயனும். பிராணயா மத்தினால் வாயுவையடக்கி, மனதை யலையாமல் நிறுத்திப் பிரமத்தின்

சகுண சொரூபமாகிய குருவடிவை யாராதிப்பதே புருஷர்களுக்கு விதிக் கப்பட்டது.

இனி மனதை யலையவிடாமல் ஒரு நிலையில் நிறுத்தி நிர்க்குணசொரூபத்தையோ சகுணசொரூபத்தையோ சிந்திப்பதே யோகமும் தவமுமாம். அம்மனநிலை பெறுவதற்குப் பிராணவாயுவை யடக்குவதே உபாயமாமென்பர் ஒரு சாரார். மற்றொருசாரார் வாயுவையொடுக்கி மனதை வசப்படுத்துவது கஷ்டசாத்திய மாதலால், அந்தக் கஷ்டம் சிறிது மில்லாமலே மனதை ஒடுக்கப்பயில்வதே தகுதியாமென்பர். அதற்குபாயம் ஆசையை அடக்குவதேயா மென்பர். இவற்றுள் பிராணவாயுவை யொடுக்கி யோகசித்தி பெற்றவர் கோரக்கர் முதலியோர். மனதை விஷயங்களிற் செல்லவொட்டாமல் தடுத்து யோக சித்திபெற்றவர் சங்கராசாரியார், அருணகிரிநாதர் முதலியோர். "ஆயின் மிக்க அறிவோர் செயலெலலாம், நேயமிக்க மனத்தை நிறுத்தல் காண்,வாயு நிற்க மனமு முடனிற்கும், தோய நிற்குறி னிற்குந் துரும்புமே." "காட்டுக் குறத்தி பிரான்பதத்தே கருத்தைப் புகட்டின், வீட்டிற் புகுதல் மிகவெளிதே விழி நாசிவைத்து, மூட்டிக் கபால மூச்சையுள்ளே, யோட்டிப் பிடித்தெங்கு மோடாமற் சாதிக்கும் யோகிகளே" என்பவற்றால் அவ்விருமுறையுங் காண்க.

ஆசையை அடக்குவதினாலே மனமடங்குமென்ற முறையே சிறந்ததாம். மனவுறுதி யுடையவர்களுக்கு இதுவே சிறந்தது. "யாதனின் யாதனி னீங்கியா னோதல், அதனி னதனி னிலன்" என்றதனால் ஒவ்வொரு பற்றும் விடுவது மிகவுநன்று. இம்முறையே பெண்களுக்குவிதிக்கப்பட்டது. எவ்வாறெனின் ஆடவர்க்குக் குருவே தெய்வமாமென்றுகூறினோம். பெண்களுக்கு விசேஷமாய்ப் பிதாவே ஏற்படுவர். உபநயனகாலத்தில் குருவைத் தெய்வமாக வழிபடக் கற்பிப்பது போலப் பெண்களுக்கு நாயகனையே தெய்வமாகவும் தரிசிப்பதே விவாகத்தின் முறையாம். பெண்களுக்கு நாயகனே குருவும் தெய்வமுமாம். புருஷன் தன் குருவைத் தெய்வமாகப் பாவித்துத் தியானிப்பது போலப் பெண்கள் தங்கள் நாயகனையே குருவாகவும் தெய்வமாகவு மதித்துத் தியானிக்கவேண்டும். மேலே கூறியபடி பெண்களுக்கு நிலையற்ற மனமே யியல்பாயிருத்தலால் வேறு புருஷர்களைக் குருவாகக்கொள்ளுதல் மறுக்கப்பட்டது. சதா தன் கணவனுக்குப் பணிவிடை செய்வதாலும், அவனைச் சிந்திப்பதாலும், அவனுடன் கூடிக்களித்து விளையாடுவதாலும் மனம் ஒரு நிலைப்படும். "பெண்கள் அழகு யௌவனம் முதலியவற்றைக் கவனிப்பார்கள். புருஷர்கள் எப்படியிருந்தாலும் அவர்களைக் கண்ட மாத்திரத்தில் ஆசை கொள்வார்கள்" என்று மநு கூறினர். இந்த விவாகம் அவ்வெண்ணத்தைத் தடுக்கும். இளம் வயதிலே தனக்கென்று ஏற்பட்ட கணவனிடத்தில் அன்பு உண்டாவது இயற்கை. இவ்விவாக சம்பந்தத்தா லிருவர் சரீரமும் ஒருசரீர மாக்கப்படுதலால், கணவனுடனொத்து அவனுடன் கூடி வாழ்வது சாதாரணமாம். ஏனெனில் அவளுடைய காதலெல்லாம் தன் நாயகன் ஒருவனிடத்திலேயே நிலைபெறும். சதா கணவனைச் சிந்திப்பது பெண்களுக்கு இயல்பு. தன் புருஷன் குணங்களையும், செய்கைகளையும், அவன் தனக்குச் செய்யும் உபதேசங்களையும், அவன் சொரூபத்தையும் நினைத்து அதுவே பரப்பிரம்மத்தின் சகுண சொரூபமென்று கருதி யிருப்பதுதான் பெண்களுக்கு மனதை விஷயங்களில் செல்

லவிடாமல் ஒருவழிப் படுத்தும் உபாயமாம். இதுபற்றியே, "ஸ்திரீகளுக்கு விவாகமே யுபநயனமாகும். புருஷன் இஷ்டப்படியிருந்து அவனுக்கு ஊழியஞ்செய்வதே குருகுலவாசமாகும். வீட்டின் வேலையைப் பார்த்துவருவதே ஔபாசனமும் அக்கினி ஹோத்திரமுமாகும்" என்று மநு கூறினார். இவ்வாறு புருஷனைத் தெய்வமாகப் பார்த்து அவனுடைய பணிவிடைகளைச் செய்வதே பெண்களுக்கு வைதிக கிருத்திய மாகுமென்று வேறு நூல்களுங் கூறின. அவன் கூறியவற்றைத் தடையின்றிக் கேட்டு நடப்பதே வேத மோதுவதாம். இது பற்றியே "கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை" என்று ஔவையாருங் கூறினார். இதுகாறுங்கூறியவதனால் பெண்கள் உலக ஆசையை ஒழித்துத் தமது மனதை ஒரு நிலையில் நிறுத்துவதற்குத் தகுந்த உபாயங் கூறியவா றுயிற்று. தன்னிடத் தன்புள்ளவனும், தன்னுடைய அன்புக்குப் பாத்திரமானவனும், தான் விரும்பியவற்றை யுதவும் தெய்வமானவனும், இகபர சாதனமானவைகளைப் போதிக்கிற குருவானவனும் இன்ப நாயகனுமான இனிய நாயகனிடத்தில் மனதைச் செலுத்தி, அதன் மூலமாகப் பேரின்ப முத்தியைப் பெறுவதே யிந்தப் பாலிய விவாகத்தால் பெறப்படும் பயனென்று நமது முன்னோர்கள் தமது பேரறிவால் கண்டு கூறினர். யாம் கூறியது பிரத்தியட்சப் பிரமாணங்களைக் கொண்டே யாதலால் பதார்த்தகுண சோதகர்கள் எளிதில் கண்டு கொள்ளக் கூடும். இப்பொழுது கூறிவந்தனவெல்லாம் முதல் வருணத்தாராகிய அந்தணர் மரபைக்குறித்தனவே யாயினும் நால்வருணத்தாருக்கு மொக்கும். ருதுகாலத்துக்குப்பிறகு விவாகம் நடத்து மியல்புள்ளவரும் ருதுவான வுடனே அந்தப் பெண்ணைக் கன்னியாமாடத்தில்வைத்தோ, அதற்குச் சக்தியில்லாதவர்கள் ருதுவான பெண்களை வெளியில் விடாமலும், புருஷர்கள் கண்களுக்குப் படாமலும் காவல் செய்தோ பாதுகாப்பது பிரத்தியட்சம். இந்தக்கௌரி விவாகத்தில் அந்தக்கஷ்டங்களெல்லா மில்லை விவாகம்செய்த அந்தத்தினம் முதல் கணவனுடன் கூடியிருந்து அவனுடைய பணிவிடைகளையும், வீட்டு வேலைகளையும், அக்கினி காரியங்களையும், அருகு பூசையையும், யாசகர்க்குப் பிச்சை யிடுவது முதலான வேலைகளையும், வீட்டில் வேலைக்காரர்களிருந்தால் நய பயங்களால் அவர்களிடத்தில் வேலை வாங்குதலையும் தேவபிதுர் ஆராதனைகளுக் குரியவைகளையும் செய்துகொண் டிருக்க நேர்தலாலும், கணவன் பக்கத்திலேயே யிருந்துகொண் டிருப்பதினாலும் விவாகமான பெண்களுக்கு வேறுவிஷயங்களில் சிந்தைசெலுத்துவதற்கிடமில்லை. தாய் வீட்டிலிருந்த போது மாதா பிதாக்களாலும், வம்சகுருவினாலும் கணவனே தெய்வமென்று கருதிப் பூஜிக்கவேண்டு மென்கிற உபதேசத்தைப் பெற்றிருப்பதால் அவர்கள் தங்கள் கணவனையே தெய்வமாக வழிபடுவதில் ஐயமில்லை. விவாகமான பின் கணவனிடத்தில் அவசியமாக வேண்டிய தைவீக சம்பந்தமான விஷயங்களையும் குடும்பப் பாதுகாப்புக்கு வேண்டிய விஷயங்களையும், இதிகாச புராணசாரங்களையும், தர்மசாஸ்திர விதிகளையும் கேட்டுத் தெளிவதிலேயே சித்தம் நாடுமாதலாலும், கணவனுடன் சம்பாஷிப்பதில்அதிகப்பிரியமுண்டாகுமாதலாலும் அப்பெண்ணின் மனம்வேறு விஷயத்தில் செல்லக் காரணமில்லை. மேலே போஜன விதியில் கூறியபடி பிராமணர்கள் போஜனமானபின் இதிகாச புராணங்களைப் படிப்பதிலும் சாஸ்திர விசாரணை செய்வதிலுமே பிற்பகலைக் கழிக்க வேண்டுமென்கிற விதியுளதென்று கூறினோம். அப்போது மனைவியுங்கூட இருந்து அவற்றை

யுணர்ந்து கொள்வது வழக்கம். இதனால் சகல சாஸ்திரார்த்தங்களுங் கேள்வியாலேயே தெரிந்துகொள்வது நமது பெண்களி னியற்கை. இனிமுடிந்தது முடிப்பது என்பதனால், கணவனைத் தெய்வமென்று போதித்து அவனை வழிபட்டு மோட்சானந்தத்தைப் பெறும் மார்க்கத்தை உபதேசிப்பதே விவாகத்தின் கருத்தாமென்க. ஆதலால் அதுவே பெண்களுக்கு "உபநயனம்" என்று சாஸ்திரங்கள் கூறியது பொருத்தமுடையது என்பதும், கணவனும் மனைவியும் ஒரு சரீரத் தன்மையைப் பெறுவார்கள் என்பதும் நன்கு புலப்படும். பெண்களுக்கு மோட்சமடையும் மார்க்கத்தை யெளிதாகக் கண்டு பிடித்துக் கூறிய நமது முன்னோர்களைத் தெய்வமாகவே வழிபடவேண்டும். யாதொரு கஷ்டமு மில்லாமல் உலகத்துக்குரிய சிற்றின்பங்களை வேண்டியவாறே யனுபவித்துக்கொண்டு இகபர வாழ்வுகளிரண்டையும் பெறுவதற்காகவே நமது முன்னோர்கள் இந்த விவாகத்தைச் சிலாக்கியமாக ஏற்படுத்தினார்கள். (வரும்.)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

குறிப்பு:—மனம் வாயு அம்சமாதலின் வாயு வடங்கின் மனமடங்கும் என்று ஒரு விதியுளது. ஆயினும் பிராணவாயு சூக்கும பஞ்ச பூதங்களின் இரஜோ குண கற்பனையா லுண்டானதாலும, அநித்தியம் ஜடம் ஆதலாலும், அதன் உறவை யடியோடு விட்டு அது நாமல்லவென்று தள்ளி, மனத்தின் உற்பத்தி ஸ்தானத்தை யறிய முயன்று, அவ்வழி மனதை யடியோடொழிக்கப் பழகுவதே ஞானப்பியாசியின் உத்தம மார்க்கமாகும். வாயுவை யடக்குவதால் அடங்கும் மனம், வாயு உதிக்கின் மீண்டுதானும் உதிக்கும். மனதிற்கு இச்சை அதாவது ஆசையே சொரூபம் - நினைப்பே வேர்-ஆதலின் ஆசையை யொழிக்க மனமொழியும். இச்சை யின்றேல் மனமில்லை. இச்சையுள்ள ஒரு பொருளிலேயே நினைவு எழும் என்பது அனுபவம். ஆகையால் இச்சையை யொழிப்பதாலும், ஆரம்பத்தில் மனம் ஒரே யிடத்தில் நிலைக்கும் வண்ணம் விடாது பழக்கம் செய்வதாலும், பக்தியாலும் ஜபத்தாலும் மனதையுபாசனை மூர்த்தியிடம் நிலைக்கச் செய்யும் பழக்கத்தாலும் உருவமனத்தை (அதாவது மனதின் இரஜோ தமோ குணங்களை) யடியோ டொழிக்கவேண்டும்-பிறகு நிஷ்டானுபவத்தால் அருவ மனமும் ஒழியும் நிலையில் வந்துவிடும். ஒழிவி லொடுக்கம் யோகக் கழற்சியில் வாயுவை யடக்கும் முறையின் இழிவைத் தெளிவாகக் காணலாம். விரிக்கிற் பெருகும்.

பத்திரிகாசிரியர்.

---

## முதலியார்

ஆரியர்கள் இந்தியாவிற்கு வந்து குடியேறுவதற்கு முந்தி, கங்கைக் கரையில் திராவிடர்கள் வசித்து வந்தனர். அவர்கள் வசித்து வந்த இடம் "தமுலு" என்றழைக்கப்பட்டு வந்தது. 'தமி' என்பதற்குத் தனிமை என்று பொருள். இவர்கள் யாவராலும் துன்புறுத்தப்படாமல் தனியாக வசித்து வந்ததனாலும், " தமுலு " என்ற தேசத்தில் இருந்ததனாலும், "தமிலர்" பின்பு தமிழர் என்று அழைக்கப்பட்டு வந்தனர். ஆரியர்களால் இவர்கள்

துரத்தப்படவே, இவர்களில் ஒரு சாரார் தொண்டை நாட்டில் குடியேறினர். பின்வரும் பாட்டால் தொண்டை நாட்டின் எல்லையை அறிக:—

“மேற்குப் பவளமலை வேங்கடம் நேர்வடக்காம்
ஆர்க்கும் உவரி அணிகிழக்குப் - பார்க்குளுயர்
தெற்குப் பிணுகி திகழிருப தின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு”

இவர்களில் பெரும்பாலோர் உழுது ஜீவனம்செய்து வந்தனர். இவர்கள் காலத்தில் சாதி வேற்றுமை இருந்ததாகத் தெரியவில்லை. “பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா - செய்தொழில் வேற்றுமையால்” என்னும் வள்ளுவர் வாக்கானு மறிக. உழுதுண்டு வாழ்ந்து வந்ததனால் இவர்கள் வேளாளர் என்றழைக்கப்பட்டு வந்தனர்.

வேளாளர் என்பதற்கு வெள்ளத்தை யாளுபவர் என்று பொருள். அதாவது இவர்கள் நிலத்திற்கு நீர் பாய்ச்சும் போது வெள்ளப் பெருக்கை உபயோகப் படுத்துவதனு லென்க. இவர்கள் மற்றும் காராளன், கார்கட்டன், அகம் உடையான், காசி காவலன், வில்பெத்த நாட்டான் என்றும் அழைக்கப்பட்டு வந்தனர். காராளன் என்பதற்கு மேகத்தை யாளப்பட்டவன் என்று பொருள். மேகத்தினின்று வரும் மழை நீரை ஆளப்பட்டவர் அதாவது உபயோகப் படுத்துகிறவர்க ளாதலின் அவ்வாறு அழைக்கப்பட்டு வந்தனர். கார்கட்டன் என்பதற்கு மேகத்தைக் கட்டுபவன் என்றுபொருள். இந்திரன் ஒரு அரசன்மீது வெகுண்டு, மழை பொழியா திருக்கும்படிச் செய்தானெனவும்,அதனுல் நாடெங்கும் பஞ்சம் பரவவும், அதனைக்கண்டு அரசன் ஆற்றாணுகி இந்திரனுடன் போர்செய்து அவனைத்தோல்வியுறுவித்து மேகத்தைத் தன் வசப்படுத்தி மழைபெய்விக்கச் செய்து தன் நாட்டிலுள்ள பஞ்சத்தை நீக்கினனெனவும் ஒரு புராண கதையுண்டு. அவ்வரசன் ஆரந்தாங்கு பாண்டியன் என்ப. இதனுல்தான் கார்கட்டன் என்னும் பெயரும் பெற்றனன் என்று சொல்லப் படுகிறது. அகம் உடையான் என்பதற்கு நிலத்திற்கு உரியவன் என்று பொருள்.

இவர்கள் பயிர்த்தொழில் செய்தல் மாத்திரமே யன்றி ஏனைய தொழில்களிலும் வல்லவர்களா யிருந்தனர். இவர்கள் சிறந்த போர்வீரர்களாகவு மிருந்தனர். விற்பயிற்சியில் சிறந்து காணப்படவே வில்பெத்த நாட்டான் என்று அழைக்கப் பட்டனர். கோட்டை கொத்தளங்களை, பகைவர் பின்காட்டி யோடும்படிசெய்து, காத்து வந்ததனுலும், பெரிய சேனைகளுக் கெல்லாம் சேனுதிபதிகளாகவும், தளகர்த்தராகவும், (Commanders) இருந்ததனுலும் காசிகாவலன் என்னும் பெயர் பெற்றனர்.

நெய்தற் றொழிலிலும் இவர்கள் சிறந்து விளங்கினர். இவர்களால் பல மெல்லிய வஸ்திரங்கள் செய்யப்பட்டு வந்தன. இவ்வஸ்திரங்கள் பல வெளிநாடுகளுக்கும் அனுப்பப்பட்டு வந்தன. எலி மயிரினுல் ஒருவகைக் கம்பளமும் இவர்கள் நெய்து வந்தனர்.

இவர்கள் சிறந்த கப்பல் வியாபாரிகளாகவும் காணப்பட்டனர். கப்பல் செய்யுந் திறமையும் இவர்களுக்கு உண்டுஎன்று வின்ஸன்ட் ஸ்மித் சொல்லியிருக்கிறுர். இவர்கள் இலங்கையிலிருந்து முத்துக்களைக்கொண்டு வந்தனர்,

ஐரோப்பாவிலிருந்து தச்சவேலை செய்பவர்களைக் கொண்டுவந்திருக்கின்றனர். அத்தேசம் "எவனதேசம்" என்று அழைக்கப்பட்டு வந்தது. கிரேக்க பாஷையில் நம் தமிழ் வார்த்தைகளான அரிசி, இஞ்சி, தோகை முதலிய வார்த்தைகள் சேர்க்கப்பட்டதே, கிரேக்கர்களும் ரோமன் தேசத்தார்களும் நம் நாட்டுடன் வியாபாரம் செய்து மேற்கண்ட இஞ்சி முதலானவைகளைக் கொண்டு போயினர் என்பதைச் சான்றுபடுத்தும்.

இவ்வாறு இவ்வேளாளர்கள், ஏனையவர்களுக்கு எவ்வாற்றானும் தாழ்வுபடாது உழுதற்றொழிலில் மாத்திரமேயன்றி, வில் வாள் பயிற்சியில் மிக்கு பொருதற் றொழிலிலும், நெய்தற் றொழிலிலும், வியாபாரத்துறையிலும், மற்றும் உள்ள எல்லாத்தொழில்களிலும் வல்லவர்களாய்க்காணப்படவே, இவர்களுக்குச் சிறப்பாக " முதலார் " என்னும் பட்டம் அளிக்கப்பட்டு வந்தது. இவர்களுக்குள் மிக்க சிறந்தவர்களுக்கு " மஹாமுதலார் " என்னும் பட்டம் கொடுக்கப்பட்டு வந்தது. இராமயணத்திலும், ஜடாயுவுக்கு " விவாக முதலார் " என்றும், சுக்கிரீவனுக்கு ' வானர முதலார் " என்றும் பட்டம் அளிக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இலங்கையில் இப்போதும் முதலியார் மஹா முதலியார் என்ற பட்டங்கள் துரைத்தனத்தாரால் அளிக்கப்படுகின்றன.

இம்முதலார் என்ற பட்டமே நாளடைவில் முதலியார் என்று திரிந்து வந்தது. இப்பொழுது நம் அரசர்களால், "ஸர்", "சி. ஐ. இ.", "ராவ் பகதூர்" முதலிய பட்டங்கள் அளிக்கப்பட்டு வருவது போலவே அக்காலத்திலும் "திரியன்", "காயன்", "உடையன்", என்னும் பட்டங்கள் அரசர்களால் கொடுக்கப்பட்டு வந்தன.

இம்முதலார்கள் (பின்பு முதலியார்கள்) அரசர்களால் நன்குமதிக்கப்பட்டு வந்தனர். அரசர்களுக்கு மந்திரிகளாகவும் இருந்திருக்கின்றனர். சேக்கிழார் சுவாமிகள் ஒரு வேளாளர்தாம். அவர் அனபாய சோழனுக்கு மந்திரியாக இருந்ததாகப் பெரிய புராணங்கூறுகிறது. பிற்காலத்திலிருந்த ஆரிய நாத முதலியார் என்பவர் விஜய நகர அரசனிடம் முதலில் ஒரு குமஸ்தாவாக இருந்தனரென்றும், பின்பு இவர் ஒரே வீச்சால் ஒரு பெரிய எருமையின் கழுத்தை வெட்டியபோது இவர் சாமர்த்தியத்தைக் கண்ட அரசன் இவரைத் தன்னுடைய சேனைக்குத் தளகர்த்தராக நியமித்தானெனவும், அதுமுதல் அவ்வேலையிலும் சிறந்து காணப்பட்டாரென்றும், பின்பு அவ்வரசன் அவரைத் தனக்குகந்த மந்திரியாக்கிக் கொண்டானென்றும் சொல்லப் படுகிறது.

முதலியார்கள் பேசிவந்த பாஷை தமிழ். தமிழினுடைய சிறப்பும் தொன்மையும் எல்லாருக்குந் தெரியும். ஏனைய நாட்டார்கள் சிறிதேனும் நாகரீக மின்றிக் காட்டு மிருகங்கள்போல மரங்களின் மீதும் குகைகளிலும் வசித்திருந்ததற்கு முன்னரே நம் செந்தமிழ்ச் செலவி வடமொழிக்கு எவ்வாற்றானுந் தாழ்வுபடாது சமத்துவமாக அரியாசனத்தில் வீற்றிருந்தாள். அவள் தற்போழ்து அடைந்திருக்கும் நிலைமையை அன்பர்களே அறிவார்கள். இதை யெழுதும் போது, பாண்டித்துறை இராஜா அவர்களால் ஆதரிக்கப்பட்டு வந்த தமிழ்ச் சங்கக்கட்டிடம் சில தினங்களுக்கு முன் தீக்கு இரையாயினமை ஞாபகத்தில் வருகிறது. சுமார் ஒருலக்ஷம் ரூபாய் வரை

நஷ்டம் ஆயிற்றும். அந்தோ! இதுவும் கடவுளுக்கு விருப்பம் போலும். இப்பொழுது நம்மை "மற்றொன்று விரித்தல்" என்னும் குற்றத்தினின்று மன்னிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

தமிழில் முதலாகள் வல்லவர்களா யிருந்தனர். அவர்களில் பலர் பாண்டித்தியம் வாய்ந்து புலவர்களா யிருந்தனர். நாடக நூல்களையும் 300 கி. மு விற்குமுன்பு இயற்றியதாகத் தெரியவருகிறது. பிற்காலத்தவராகிய கம்பரும், புகழேந்தியும், சேக்கிழாரும், அப்பரும், தாயுமானாரும் இன்னும் பலமேதாவிகளும் மகான்களும் வேளாண்குடியிலே பிறந்தவர்களேயாவர். இவர்கள் மற்றும் சங்கீதத்திலும், சிற்பத் தொழிலிலும் சிறந்து காணப் பட்டனர்.

இவர்களின் மதம் சைவமும் வைஷ்ணவமு மாகும். இவர்கள் அவ் வளவாக மத வித்தியாசம் கொள்ளவில்லை யென்பதை, இவர்களுக்குள் வித்தியாச மின்றி சைவன் வைஷ்ணவன் வீட்டில் பெண் கொள்ளுதலும், வைஷ்ணவன் சைவன் வீட்டில் பெண் கொள்ளுதலும் கொடுத்தலுமாகிய வழக்கத்தால் அறியலாம். இதுவு மன்றித் தமிழில் சிறந்த வித்வான்களில் பெரும்பாலார் (முக்கால் பாகத்திற்கு அதிகம்) இவ்வேளாண்மரபினரே. முற்கால மட்டுமன்று, தற்காலத்தும் இவ்வண்ணமே இருக்கக் காணலாம். துறவிகள், ஞானிகள் இவர்களிற் பெரும்பாலார் இவர்களே. ஞானத்திற் கும், தமிழ் மாதுக்கும் பிறப்பிடம்போன்ற கயிலாய பரம்பரை திருவா வடுதுறை மடாதீனம் இவர்களுடையதே. இவர்கள் காலத்தில், வீரர்களை யும், நாட்டிற் குழைத்த தேசபக்தர்களையும் தொழுது வந்தனர் (Hero worship); அவர்கள் இறந்தபின்னர், அவர்களைப் பாதைகளின் ஓரங்களில் அடக்கஞ்செய்து அவ்விடங்களில் கல்நாட்டி இறந்தவர்களின் பெருமை யைப்பொறித்து வந்தனர். அக்கல் "வீரக்கல்" என்று சொல்லப்படுகிறது.

விரிவஞ்சி இத்துடன் நிறுத்துகின்றேன். ஆயினும் யான் சொல்ல விருமபுவது ஒன்று உண்டு. அதாவது இத்துணைச் சிறப்பு வாய்ந்த நம் முத வியார்கள் இப்போழ்துள்ள சீர்கேடுற்ற நிலைமையை நோக்கில், அந்தோ!.

வே அ. கமலநாதன்.
பெங்களூர் தண்டு.

---

ஆனந்தபோதினியின் ஆறும் வருட

## வாழ்த்துப்பாக்கள்.

நேரிசை வெண்பா.

ஆனந்த போதினிதன் ஆறும் பிராயத்தில்
ஆனந்த மாகி யனுதினமும்—ஆனந்த
நன்னிலையே பெற்று நடுநிலைமை யாய்நின்று
தன்னிலையே நிற்கத் தழைத்து.

கட்டளைக் கலித்துறை.

சீருற்ற செந்தமிழ்ச் சென்னைத் திருப்பதிச் செல்வியெனப்
பேருற்ற வானந்த போதினி சொல்லும் பெருமைமொழிக்
கேருற்ற தேவ ரெடுத்த வமுதமொப் பில்லையென்றே
பாருற்ற நாவல ரின்பப் பெருக்கிற் பகர்ந்தனரே.

நேரிசை வெண்பா.

சித்தாந்த வேதாந்த சீலம் நமர்க்களித்து
வித்தியா போதம் விளக்கிவரும்—தத்துவங்கொ
ளானந்த போதினியை யன்பாக நோக்குபவர்க்
கானந்த மேவிளையு மாம்.

சத்தான தன்னையே தான்கண் டனுபவிக்க
வுத்தியாய் முன்னோ ருபகரித்த—சுத்தமுறும்
அத்துவித சாரத்தை யானந்த போதினிநற்
பத்திரிகை யின்மனமே பார்.

சென்ற திசைதோறுந் தீதகற்று மானந்தற்
கொன்று நிகரில்லை யுள்ளபடி—என்றுமிதைச்
சந்தா குறைத்துத் தமிழ் வளர்க்கு மாசையினால்
தந்தார் முனிசாமி தான்.

அன்னை சிசுவுக் கறிவூட்டும் பான்மையெனச்
சொன்ன தமிழின் சுவையூட்டும்—பொன்னவையி
லாடும் பரனருளா லானநத போதினிதான்
நீடூழி வாழ்க நிலத்து. இங்ஙனம்

சே. முத்துக்குமாராசாரி,
திரிகோணமலை.

---

நேரிசை வெண்பா.

சைவந் தழையாதோ சற்சனர்க ளேமிகுத்து
உய்யக் கருணைமழை யோங்காதோ—வையகத்தில்
பாதிமதிசூடும் பரமனொரு ஆனந்த
போதினியென் றிங்குவந்தபோது.

ஆசிரிய விருத்தம்.

கற்கண்டு சீனிதேங் கனிபாகு பாலுடன்
கலந்தூட்டு தேவ வமுதே
கரியமால் விஜயனுக் கந்நாளில் போதித்த
கமழ்ஞானமொளிர் கீதையே
சொற்கொண்ட சமையகுர வர்நால்வ ருரைசெய்த
தேவார தொல் வேதமே
சிவயோக நிலைநின்று திருஞான விழிபெற்ற
சித்தர்க ளருட்பா டலே
பொற்கொண்ட தமிழ்மணிக ளோலமிட் டேவாப்
பொருக்கித் திரட்டி யொன்றாப்
போதிக்க வந்தகுரு நாதனே யுன்பெருமை
புகலவென் னாவியலுமோ
அற்பாறி யாருனது அதிமதுர வாசகம்
அறிவோ ரறிந்தோர் களே
அன்னைவளர் சென்னைசௌ கார்பேட்டை தங்கிமுத்
தமிழ்பொழியு மானந் தனே.

 கா - க. ஞானபாலன், பீத்தகர்தை (மாத்தளை).

நேரிசை வெண்பா.

ஐந்தாம் பருவநிறைந் தாறுபெற்று மானிடரின்
சிந்தாகுலநீக்கச் சீர்த்தியுடன்—வந்தார்வம்
பொங்கிவள ரானந்த போதினியே நீயென்றும்
மங்களமா வாழ்க மகிழ்ந்து.

செம்பூர் - வீ - ஆறுமுகஞ் சேர்வை.

---

## அந்தரக்களவு அல்லது
## தபால் கொள்ளைக்காரர்கள்
## 1-வது அத்தியாயம்

நமது ஆனந்தஸிங் இரத்னபுரியி லிருந்து நாகநாட்டின் பிரதான நகரமாகிய வரதபுரிக்குச் சென்று சில வருடங்கள் அங்கு வசித்திருந்தான். அவனுடையகீர்த்தி முன்னடியே உலகமுழுதும் பிரசித்தி பெற்றிருந்தது. ஆகையால் நாக நாட்டிலும் அவனுடைய புகழ் பகிரங்கமாய் யாவர்க்கும் தெரிந்திருந்தது.

ஒருநாள் அந்தத் துரைத்தனத்தின் பிரதம தபால் அதிகாரி(போஸ்ட் மாஸ்டர் ஜெனரல்) யாகிய ஜனரல் ஜெயஸிங் அவனை வரவழைத்துப் பேசிக்கொண் டிருந்தார். அவர்கள் சம்பாஷணை கீழ்க்காணுமாறு:—

ஜெயஸிங்:—"அப்படியாயின் நீ இக்கள்ளரைக் கண்டு பிடிப்பாய் என்று உனக்குத் தைரிய மிருக்கிறது ?, ஒன்றும் தவறு நடக்கலாகாது." என்றார்.

ஆனந்தஸிங் சொல்ப கோபத்தோடு, "அப்படித் தங்களுக்கு என் வல்லமையைப் பற்றிச் சந்தேக மிருந்தால்;. .. " என்பதற்குள், ஜெயஸிங் அவசரத்தோடு, "அப்படியல்ல அப்படியல்ல. உன் வல்லமை யுலகப்பிரசித்த மானதே. நான் கூறியது எதற்காக வெனில், நீ சாதாரணமாய்க் கையாண்ட குற்றங்களைவிட இது மிக்க நுட்பமானது. உன் வல்லமை முழுதும் இதற்கு வேண்டியதா யிருக்கும். ஒன்று சொல்கிறேன். அதன்மேல் நீ யொருவாறு சங்கதியை யறிநது கொள்வாய். இரயில் பாதையில் தபால் மூட்டைகள் கொள்ளை பே கின்றன. பல கொள்ளைகள் நடந்திருக்கின்றன " என்றார்.

இதைக்கேட்ட ஆனந்தஸிங் சந்தோஷத்தோடு, "பேஷ் பேஷ் ! இதுதான் சரியானவேலை. இதைக்கண்டு பிடிக்கச் சொல்லுகிறீர்களோ ?" என்றான்.

**ஜெயஸிங்:**—ஒரு களவல்ல, பல களவுகள். எனக்குத்தினம் பிராதுகள் வந்துக்கொண்டே யிருக்கின்றன. ஒரு பாதையி லிருந்தே வந்து கொண் டிருக்கின்றன.

**ஆனந்த:**—எல்லாம் ஒரேபக்கத்தி லிருந்தா ?

**ஜெயஸிங்:**—ஆம். பிராதுக ளெல்லாம் ஒரேபக்கத்தி லிருந்துதான் வருகின்றன. அக்கொள்ளை பல சிறு களவுகளாகவும் பிரிக்கப்பட் டிருக்கின்றது.

ஆனந்த:—அது மூலக்கள்ளனைக் கண்டு பிடிக்க மிக்க கஷ்டத்தை யுண்டாக்கிவிடும்.

ஜெயஸிங்:—“அதுதான் நான் கூறுவது. ஆனந்தஸிங்! நான் கூறுகிறேன். நீ இந்தக் குற்றத்தைக் கண்டு பிடிப்பதற்குள் இது மிக்க சிக்கலானதும் மிக்க தந்திர சாமார்த்தியம் வேண்டியதுமான விஷயம் என்று நீயே யொப்புக்கொள்வாய்” என்றார்.

ஆனந்த:—“இருக்கலாகும்; ஆயினும் இது வரையில் ஆனந்தஸிங் எந்த விஷயத்திற் கேனும் பின்னிடைந்தான் என்று ஒருவரும் கூறியதில்லை. சரி இதைக்கண்டு பிடிக்க நான் ஒப்புக்கொள்கிறேன். இதில் தவறிவிட்டால் இதுவே நான் கண்டு பிடிக்கத் தவறிவிட்ட முதல் குற்றமா யிருக்கட்டும்.” என்றான்.

ஜெயஸிங்:—சரி, உனக்கு நல்ல வருமான மளிக்கப்படும். எப்போது உன் வேலையை யொப்புக் கொள்கிறாய்?

ஆனந்த:—இன்றைக்கே.

ஜெயஸிங்:—நல்லது. ஆனால் நீ ஆயத்தமா யிருக்க வில்லையே.

ஆனந்த:—“தாங்கள் என்னை ஐந்து நிமிடங்களில் ஆயத்தப்படுத்தி விடலாகும்” என்று கூறிக்கொண்டே தன் ஜேபியிலிருந்த ஒரு குறிப்புப் புத்தகத்தை யெடுத்துக்கொண்டு, “முன்னே எந்தப் பாதைகளில் களவு நடக்கிறது கூறும். இதற்கும் அமலாபூருக்கு மிடையில் ஹரியாற்றின் கரையோரமே செல்லும் இரயில் பாதையின் தபால் வண்டிகளில் தானே?” என்றான்.

ஜெயஸிங் வியப்படைந்து “உனக்கெப்படித் தெரியும்?” என்றார்.

ஆனந்தஸிங்:— எப்படி யெனில் வடக்கே செல்லும் தபால்களனைத்தும் அமலாபூரில்தான் சேர்கின்றன. அதற்கப்பால் களவு நடப்பதாயின் அப்பாலிருந்து பிராதுகள் வரும். ஆகையால் இதற்கும் அமலாபுரத்திற்கும் இடையில்தான் இது நடக்கிறது. களவுபோன தொகை யெவ்வள விருக்கும்?

ஜெயஸிங்:—இப்போது இவ்வளவென்று கூற முடியாது. ஆனால் பெருந் தொகை யென்பதிற் சந்தேகமில்லை.

ஆனந்த:—இது ஒரே காலத்தில் ஓரிடத்தில் நடந்ததா யிராது.

ஜெய.—இல்லையில்லை. பலகாலங்களில் பல விடங்களில்; இடங்கள் எங்களால் கண்டறிய முடியவில்லை. எங்களால் முடியுமானால் உன் உதவியைக் கோரமாட்டோமே.

ஆனந்த:—சரி. இவ்வளவே தாங்கள் கூறக்கூடிய விஷயங்கள்.

ஜெயஸிங்:—ஆம். ஆனால் அந்தந்தப் பாதைகளிலுள்ள போஸ்டு மாஸ்டர்களுக்கும் தபால் ஏஜெண்டு களுக்கும் தங்களாலான உதவிசெய்யும் படி யுன்னிடம் சிபாரிசுக் கடிதங்கள் கொடுக்கிறேன்.

ஆனந்த:—கண்டிப்பாய் வேண்டவே வேண்டாம்.

இதைக்கேட்ட தபால் பிரதம அதிகாரி மிக்க வியப்படைந்து "கண்டிப்பாய் வேண்டாமா? என் அவர்களால் உனக்கு உதவிகிடைக்காதா?" என்றார்.

ஆனந்த:—இல்லை; கிடைக்காது.

ஜெய:—என் கிடைக்காது.

ஆனந்த:—அதை யிப்போது கூறமாட்டேன்.

ஜெய:—சரி, அந்த இரகசியம் உன்னளவே யிருக்கட்டும். நான் மறுபடி யெப்போது உன்னிட மிருந்து சமாசார மறியலாம்?

ஆனந்த:—எப்போது கள்ளனைப்பிடித்து விடுகிறேனோ அப்போது.

ஜெய:—ஆனால் நீ தந்திகொடுக்கலா மல்லவா?

ஆனந்தஸிங்:—"நான் குற்றவாளியை யறிந்து பிடித்து விட்டதே தெரியப்படுத்துவேன். அதுவரையில் தாங்கள் பொறுமையா யிருக்கவேண்டுகிறேன். அதோடு இந்தத் துரைத்தன சம்பந்தமான குற்றத்தைப்பிடிக்க நான் ஒப்புக்கொண் டிருக்கிறே னென்று தாங்கள் ஒருவரிடமும் கூறலாகாது. இது முக்கியமான நிபந்தனை. அப்படி மூன்று மாதங்களில் நான் இதைப் பிடித்து விட்டதாய்த் தங்களுக்குத் தெரிவிக்கா விட்டால் நான் முதல் முதல் கண்டு பிடிக்காத குற்றம் இதுவே யென்று தாங்கள் கூறிவிடலாகும்." என்று முடிவாய்க் கூறிவிட்டு விடைபெற்றுக் கொண்டு சென்றான்.

ஆனந்தஸிங் அறையைவிட்டுச் சென்றதே ஜெயஸிங் அவன் தன்பார்வைக்கு மறையுமட்டும் அவனையே உற்றுப் பார்த்துக்கொண் டிருந்து, அவன் மறைந்ததே, "ஆ! இவன் எப்படியும் இதைக் கண்டு பிடித்து விடுவான்" என்று தமக்குத் தாமே கூறிக்கொண்டார்.

ஆனந்தஸிங் இக்குற்றத்தைக் கண்டு பிடிப்பதாய் ஒப்புக்கொண்டபோது இது எவ்வளவு கஷ்டமும், தொந்திரவும்,எத்தகைய பிராணபத்தானது மென்று அவனுக்குத் தெரியாது.

இக்கதை நடக்கும் காலத்தில் நவீனபுரியில் பட்டர் வீதியில் ஒரு பிரபலமான ஹோட்டல் இருந்தது. அது நான்கடுக்குமாடி. அதன் மேல் மாடிகளிலெல்லாம்சாதாரணமானஜனங்கள்குடியிருந்தார்கள். அதன்தரைமட்டத்தின் கீழ் பெரிய கூடமும் அறைகளு முண்டு. அங்கு உலகத்திலுள்ள எல்லாவிதமான கள்ளர்கள், கொலையாளிகள், சூதாடிகள், பரம துஷ்டர்கள் முதலிய அனைவரையும் காணலாம். ஆகையால் அந்த ஹோட்டலுக்கே பாதாள மாளிகை யென்று பெயர்.

அந்தக் கட்டிடத்தின் சொந்தக்காரன் மார்க்கபந்து என்பவன். சாதாரணமாய் யாவரும் அவனை அப்பாதுரை அல்லது அப்பு என்று கூப்பிடுவது வழக்கம். சாதாரணமான காலத்தில் அவன் மிக்க மரியாதையும் நாணயமு முடைய மனிதன் போலவே யிருப்பான். ஆனால் வழக்கமாக வரும் கோபம் வரும்படி தூண்டப்பட்டாலோ அவனைப் போல் எதற்கும் அஞ்சாத போக்கிரிப் பயலை எங்கும் காணமுடியாது. பிரதி இரவும் அந்தப்

பாதாள அறையில் போக்கிரிகள், முரடர், கள்ளர், சூதாடிகள், முடிச்ச விழ்ப்போர் முதலிய பலரையும் ஒரு பெருங் கூட்டமாகக் காணலாம்.

நமது கதை தொடங்கும் சமயம் அதாவது, ஒரு நாள் ஒன்பது மணிக்கு இரண்டு மனிதர்கள் இந்த ஹோட்டலின் ஓரமாகச் சாளரங்களி விருந்து வரும் வெளிச்சத்திற் படாமல் வந்துகொண் டிருக்கிறார்கள். அவர்களிருவரும் தங்கள் முகங்களை மறைக்கத்தக்க விதமாய்த் தலையணி யணிந்துகொண் டிருக்கிறார்கள். இருவரும் இடையில் நின்று யாருக்கும் கேட்காதபடி சற்றுநேரம் பேசிக்கொண்டார்கள். இவர்களில் ஒருவன் தாடி விட்டுக்கொண் டிருந்தான். மற்றவனுக்குத் தாடியில்லை.

தாடி விட்டுக்கொண் டிருப்பவன் மற்றவனை நோக்கிப் பாதாளஅறைக்குச் செல்வோமென்று சமிக்கை செய்தான். மற்றவன் அப்படியே செய்வோம் என்று தலையசைத்தான். இருவரும் அங்கிருந்த ஜனக் கூட்டத்தில் நுழைந்து பாதாள அறைக்குட் சென்று ஒரு சிறு தனி அறைக்குள் பிரவேசித்தார்கள். அங்கு ஒரு மேஜையும் இரண்டே நாற்காலிகளு மிருந்தன.

அங்கு உட்கார்ந்ததும் தாடி யுள்ளவன் தன் மடியிலிருந்து ஒரு கறுப்புப் பையை யெடுத்து அவிழ்த்து அதிலிருந்த ஒரு புகைப் படத்தை யெடுத்துத் தன் நண்பனுக்குக் காட்டினான். நண்பன் அதை எச்சரிக்கையோடு வாங்கி அங்கிருந்த தீபவொளியிற பார்த்தான். தாடியுடையவன்,

“ ஆ ! இவனைத்தான் நான் பிடிக்க வேண்டும்” என்றான். மற்றவன் அதை நன்றாய் உற்றுநோக்கி “ ஆகா ! ஆம் ஆம்; இவனை நான் எங்கோ பார்த்திருக்கிறேன்” என்றான்.

தாடியுடையவன்:—எங்கு கண்டாய் கவன மில்லையோ?

மற்றொருவனாகிய நமது ஆனந்தலிங்:—

இரு இரு. .ஆ! ஆம். ஆம். கடந்த வசந்த காலம் பண்டரி புரத்தின் கடற்கரையில் கண்டேன்.

தேவராஜு என்ற தாடி வைத்துகொண் டிருந்த ஆள்: “அங்கு அவன் என்ன செய்துக்கொண் டிருந்தான்?’ என்றான்.

ஆனந்த:—“அவன் குதிரைப் பந்தயம் விடுபவன் போல் தோன்றினான். என்ன பெயர் வைத்துக்கொண் டிருந்தானோ தெரியாது” என்றான்.

தேவ:—துரதிஷ்டம். இம்மனிதன்தான் எனக்கு வேண்டியவன்.

ஆனந்த:—“கடவுள் தயவால் நீ ஜயமடைவா யென்றே கருதுகிறேன்” என்று கூறிக்கொண்டே புகைப் படத்தை யவனிடம் அளித்து விட்டான்.

நண்பர்களே ! தேவராஜு என்பவனும் மிக்க சாமார்த்தியவானாகிய ஒரு துப்பறிபவனே. அவனும் நமது ஆனந்தலிங்கும் மிக்கநேசர்கள். நமது நாட்டாராயின் ஒரே தொழிலில பிரக்கியாதி பெற்றவர்களா யிருப்பதற்கு ஒருவருக்கொருவர் மிக்க பொறாமைகொண்டு ஒருவரை யொருவர் அழிக்க முயல்வார்கள். மேல் நாட்டாரோ அத்தகைய இழிகுணத்திற்கு இடம் கொடாமல் ஒருவரை யொருவர் பின்னால் புகழ்ந்து கூறிக்கொண்டு, முன்னிலையில் ஒருவருக் கொருவர் மிக்க சினேக வாஞ்சை பாராட்டி உதவி செய்வார்கள்.

ஆனந்தஸிங் தேவராஜை நோக்கி "ஆயினும் நீ இந்த ஆளை யேன் பிடிக்கப் போகிருய்? பொய்ப் பத்திரமா?கொள்ளையா? என்ன?" என்ருன்.

தேவராஜ:—கொலை. கடந்த வருடம் இதே காலத்தில் நடந்த கோபாலு சாமி ஸர்தார் கொலை சங்கதி கவனமிருக்கிற தல்லவா? இரவில் கள்ளர் புகுந்து கிழவனை 'க்ளோரோயாரம்' என்ற பாஷாணத்தால் கொன்றுவிட்டு வீட்டிலிருந்த வெள்ளிப்பாத்திரங்கள் முதலிய விலையுள்ள சாமான்க ளனைத்தும் கொள்ளை யடித்துக் கொண்டு போய்விட்டார்கள். மறுநாள் என்னை வரவழைத்தார்கள். நான் வந்து பார்த்தேன். என்ருல் ஒன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை. அன்றுமுதல் எவ்வித உளவும் அகப்படவில்லை. இன்றைக்கு அதைப்பற்றிய உளவுக்காகவே இங்கு வந்திருக்கிறேன்.

ஆனந்த:—இங்கே உளவகப்படுவதா !

தேவ:—ஆம்;இந்தபொட்டகிராபிலிருக்கும் இம்மனிதனை மேற்படிகொலை நடந்த மூன்தினம் கோட்டை ஸ்டேஷனில் கண்டேன். அவன் இதிற் சம்பந்தப் பட்டவனென்று எனக்குப் பூராய் சந்தேக மிருக்கிறது நான்இரயில்வண்டியில் நவீனபுரிவரையில் அவனைப் பின்தொடர்ந்து போயும் அவன் அங்கு எப்படியோ மாயமாய்ப் போய்விட்டான்.

ஆன:—அவனைக் கோட்டை ஸ்டேஷனில் இன்னும் யார் பார்ததது?

தேவ:—கொலை செய்யப்பட்ட கோபாலுசாமி ஸர்தாரின் மகன் சாமிநாதன்.

ஆனந்த:—ஓ கோ அவன் எந்த வழியில் சீவனம் செய்கிருன்.?

தேவ:—அவன் இரயில் தபாலின் ஒரு மெயில் ஏஜன்ட்போ லிருக்கிறது" என்ருன்.

இதைக் கேட்டதே ஆனந்தஸிங் திடுக்கிட்டான்.

தேவ:—என் திடுக்கிட்டாய்?

ஆன:—ஒன்றுமில்லை. இரயில் தபால் என்றதே எனக்கேனே திடுக்கிட்டு விட்டது. மற்றபடி யொன்றுமில்லை. அப்புறம் சங்கதியைக் கூறு.

தேவ:—சங்கதி யிவ்வளவே.

ஆனந்த:—"இதற்குத் தானு என்னை இங்கு நிறுத்தினுய்? இன்றேல் நான் அமலாப்பூர் கிட்டத் தட்டப் போய்விட் டிருப்பேனே" என்ருன்.

தேவ:—இல்லையில்லை.நான் என்சங்கதியை யின்னும் முடியக் கூறவில்லை. இரு இரு. நான் இப்போது ஒரு மரியாதையான களவு குற்றத்தில் சிக்கியிருக்கிறேன். அதில் ஒரு யோக்கியன் அநியாயமாகக் குற்றம் சாட்டப்பட் டிருக்கிருன். அவன் மானத்தைக் காப்பாற்ற வேண்டும். அதைக்கண்டு பிடிக்க ஒரு வருடமாவது பிடிக்கும். ஆகையால் எனக்கு ஒரு வருடமட்டும் இதில் தலையிடமுடியாது. ஆகையால் இதையுன்னிடம் ஒப்பித்துவிடக் கருதியிருக்கிறேன். இதற்காகவே உன்னை நிறுத்தினேன்" என்ருன்.

(தொடரும்.)

## அறிவிப்பு.

முன்பணா மனுப்பிய சந்தாதாரர்களனைவர்க்கும், பங்குனிமாதச் சஞ்சிகையோடு அடுத்த வருடப் பஞ்சாங்க மனுப்பப்படும்

பத்திராதிபர்.

---

## பொது சமாசாரங்கள்.

கம்பியில்லாத தந்திப்பேச்சு —டெல்லகிராம் அடிக்கிறதுபோல யந்திரத்தில் செய்திகளை அடிக்க கம்பியில்லாமலே ஓரிடத்திலிருந்து மற்ற இடங்களுக்குச் சங்கதிதெரிந்துகொள்ளு முறை கம்பியில்லாத தந்தியென்று சொல்லப்படுகிறது. ஆனல் இப்பொழுது ஒரு இடத்தில் பேசும் வாய்ப்பேச்சு அல்லது பாடும் பாட்டு மற்ற இடங்களுக்குக் கேட்கும்படியான வசதிகள் அமைக்கப்பட்ட புது இயந்திரமொன்று கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறதாம் செம்ஸ்போர் இங்கிலாந்தி லுள்ளது;இந்நகரிலுள்ள அத்தகைய இயந்திரத்தண்டை சமீபத்தில் மகாப் பிரசித்திபெற்ற மிஸர்ஸ் மெல்பா பாடினரென்றும், அவர் பாடியது பெர்லின் முதலிய இதர இடங்களில் தெளிவாய்க் கேட்கப்பட்ட தென்றும், பாரிசில் அப்பாட்டின் போனேகிராப் ரிக்கார்டு எடுக்கப்பட்ட தென்றும், தந்திச்செய்தி யொன்றால் தெரியவருகிறது.

வேல்ஸ் இளவாசர் விஜயம்.—மகாமேன்மை தங்கிய வேல்ஸ் இளவரசர் அடுத்த 1921ளு ஜனவரிமீ 3-ம் தேதி காலே சென்னை ஹார்பரில் வந்து இறங்குவாரென்றும் அவருக்கு அன்று மாலே மன்ரொ சிலைமைதானத்தில் மிக்க சிறப்புடன் சென்னை இராஜதானிப் பொது ஜனங்களால் பகிரங்க நல்வரவோபசாரப் பத்திரம் வாசிக்கப்படுமென்றும், அடுத்த தினமாகிய ஜனவரிமீ 4-ம் தேதியன்று அவர்புதுச்சட்ட சபையைத்திறந்து வைப்பரென்றும், அடுத்த தினங்களில், அரசாங்க மாளிகையில் பொதுவரவேற்பு, பால்ஆட்டம், கிண்டியில் குதிரைப் பந்தயம், செண்ட் ஜியார்ஜ் கோட்டை விஜயம், டிராம் வேய்க்காக தற்போது விரிவாக்கப் பட்டுவரும் கவர்னர் வீட்டு வாராவதியின் ஆர்ச் என்னும் வில்மாடமொன்றுக்கு ஆப்புக் கல்லிடுதல், மெட்ராஸ் கிளப்பாராலும் காஸ்மோ பாலிட்டன் கிளப்பாராலும் விருந்துக்கொண்டாட்டங்கள், இந்தியஇராஜாக்களுக்குப் பேட்டி முதலிய வைபவங்கள் நடைபெறுமென்றும், ஜனவரிமீ 6-ம் தேதியாகிய வியாழக்கிழமை சென்னையைவிட்டு அவர் புறப்படுவார் என்றும் சமாச்சாரம் தெரியவருகிறது.

சர்க்கரை கொடுக்கும் மரம்:—அமேரிக்காவிலுள்ள ஒருவித மரத்தாளில் சில ரசாயனவேலே செய்வதினல் சர்க்கரை உண்டாக்கும் வகையை ஒரு அமேரிக்கா ரசாயன சாஸ்திரி கண்டுபிடித்திருக்கிறாராம். இம்முறையைமற்ற ரசாயன சாஸ்திர நிபுணர்கள் பரீட்சித்துக் காரியசித்தியுள்ளதென நிர்ணயித்தால் சர்க்கரை எராளமாகப் பெறப்படுமெனவும், அதன் விலே ஒருவாறு குறையலாமெனவும் எதிர்பார்க்கலாம். அப்படிப்பட்ட பரீசோதனை நடந்துகொண்டிருப்பதாகத் தெரியவருகிறது.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்

## இரௌத்திரிஸ்ரீ ஆவணிமீ—சாலிவாகனம் 1843-கலியுகாதி 5022

## பசலி 1329-30—கோல்லம் 1095-96 - ஹிஜரி-1338-39

## இங்கிலீஷ் 1920-ம்ஸ்ரீ ஆகஸ்டுமீ—செப்டம்பர்மீ

| ஆவணிமீ | ஆகஸ்டுமீ | வாரம் | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | தி | தி-56-53 | பூர-13-37 | சித்-60 | |
| 2 | 17 | செ | ச-55-1 | உத்-12-27 | அ-12சி | |
| 3 | 18 | பு | ப-54-27 | அஸ்-12-27 | ம-12சி | |
| 4 | 19 | வி | சஷ்-55-6 | சித்-13-59 | சி-1ⲓஅ | |
| 5 | 20 | வெ | சப்-57-3 | சுவா-16-44 | சி-60 | |
| 6 | 21 | ச | அ-60-0 | விசா-20-40 | சி-60 | |
| 7 | 22 | ஞா | அ-1-26 | அனு-25-42 | ம-60 | |
| 8 | 23 | தி | நவ-4-29 | கே-31-33 | சித்-60 | |
| 9 | 24 | செ | தச-9-29 | மூல-37-58 | அ-37சி | |
| 10 | 25 | பு | ஏ-14-25 | பூரா-44-35 | அமி-60 | |
| 11 | 26 | வி | து-19-20 | உரா-50-50 | சித்-60 | கெர்ப்பதானம் |
| 12 | 27 | வெ | தி-23-43 | திரு-57-23 | ம-57-சி | கடகம் விவசாயம் |
| 13 | 28 | ச | ச-27-21 | அவி-60-0 | சித-60 | கன்னியந்திரவேலை |
| 14 | 29 | ஞா | ○-29-51 | அவி-0-54 | ம-1சி | ஆபரணம் பூண |
| 15 | 30 | தி | பிர-31-7 | சத-4--6 | சித்-4ம | வியாபாரம், பிரயாணம் |
| 16 | 31 | செ | து-31-7 | பூட்-5-48 | ம-5அ | இரவு பிரயாணம் |
| 17 | 1920ஸ்ரீ செப்டம்பர்மீ 1 | பு | தி-29-50 | உட்-7-19 | சி-7உ | சீமந்தம்,2-வது விவாகம் |
| 18 | 2 | வி | ச-27-2 | ரே-7-12 | சி-7அ -சி | விவசாயம், நர்தவனம். |
| 19 | ꞌ3 | வெ | ப-23-51 | அசு-5-53 | அ-5சி | சீமந்தம், வியாபாரம் |
| 20 | 4 | ச | சஷ்-19-28 | பர-3-39 | சி-3அ | கிருத்திகையின்படி |
| 21 | 5 | ஞா | சப்-14-36 | *கிரு-0-39 | அ-60சி | கெர்பபுதானம் |
| 22 | 6 | தி | அ- -52 | மிரு-53-10 | அசி-60 | 2-வது விவாகம், வியாபா |
| 23 | 7 | செ | தச-53-58 | திரு-43-58 | ம-48-சி | மிதுனம் பிரயாணம் |
| 24 | 8 | பு | ஏ-50-37 | புன-44-39 | சித்-60 | விவசாயம் |
| 25 | 9 | வி | து-44-47 | பூச-40-36 | அசி-60 | கன்னி சீமந்தம் |
| 26 | 10 | வெ | தி-39-28 | ஆயி-37-18 | மர-60 | ........... |
| 27 | 11 | சனி | ச-34-46 | மக-34-26 | அ-34சி | கிராமப் பிரவேசம் |
| 28 | 12 | ஞா | ●-30-55 | பூர-32-20 | சி32அ | சிறிய தானியம் விதை |
| 29 | 13 | தி | பிர-27-54 | உத்-18-32 | சித்-60 | கரிநாள் இரவு |
| 30 | 14 | செ | து-26-7 | அஸ்-31-17 | சி-60 | துலாம் நாற்றுநட.. |
| 31 | 15 | பு | தி-25-28 | சித்-32-30 | சி-60 | கன்னி சீமந்தம் |

| | | | |
|---|---|---|---|
| | கே | | |
| | 7-விரு-செ<br>11-சிங்-புத<br>15-கன்-சு<br>28-கன்-பு | | புத |
| | | | சூ-கு<br>ச-சு |
| | | ரா-கு<br>செவ் | |

PRINTED AND PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" PRESS, 15, VENKATESA MAISTRY STREET, MADRAS.